முதற் பதிப்பு: திசம்பர்' 78


விலை உருபா ஒன்பதேமுக்கால்

AGNI SHATCHIYAGA

(A TAMIL SOCIAL DRAMA)

POET KAVIRI NADAN (1939)

கண்மணி அச்சகம்-பீட்டர்ஸ் சா

இராயப்பேட்டை, சென்னை-14

செங்கால் மடநாராய்
தென்னுறந்தை சேறியேல்
நின்கால் மேல் வைப்பன் என்
கையிரண்டும் - நன்பால்
கரை உறிஞ்சி மீன் பிறழும்
காவிரி நீர் நாடற்
குரை யாயோ யானுற்ற நோய்!

முத்தொள்ளாயிரம்.



# காணிக்கை

என் அன்னை

பாப்பாயி

அம்மானின்

அன்புத்

திருவடி

களுக்கு!

-கா

# அணிந்துரை

நாடகப்பாவலர், 'கவிஞர்'
திரு. ச. மு மேகலை பி.ஏ., பி.டி

காவிரிக்கரையை ஒட்டியது,
காணுமிடமெல்லாம் பச்சை வயல்கள்,
தென்னையும், வாழையும் திகைப்பூட்டும்,
ஊர் வெளிப்புறத்தே நாடகமேடை,

அது கீற்றுக் கொட்டகைதான்,
அந்த கிராமத்து வாலிபர்களையெல்லாம்
ஒருங்கிணைத்த நாடகம்,
**காவிரிநாடன்** அப்போது மாணவர்.

கதை, உரையாடல், இயக்கியது
எல்லாம் அவரே!

கூட்டமோ சொல்லி முடியாது.
நானும் நாடகாசிரியன்,, நடிகன்
என்ற தெம்பிலே தலைமைக்கு
ஒப்புக் கொண்டேன்.

நாடகமல்ல, நாட்டு நடப்புக் கண்ணாடி.
உயிர்த் துடிப்பான உரையாடல்கள்.
தினம் பகலில் தெருவில் காண்கிற
பாத்திரங்கள் தாம் மேடையில் உலவினர்

காவிரி நாடனும் நான் வியக்க நடித்தார்.
அன்று முடிப்புரையில் "**நல்ல எதிர்காலம்
காவிரி நாடனுக்கும், தமிழுக்கும்
இருக்கிறதென்ற**" பூரிப்பிலே பேசினேன்.
இது நடந்தது.
1955 ஆம் ஆண்டு என்று நினைக்கிறேன்.

கவிஞர், கதையாசிரியர், சிந்தனை
விழுதுகளைப் படைத்தவர்,
**நாடக மியற்றுவதிலும் கைவந்தவர்** என்பது
இந் நாடகத்தைப் படித்துப் பாருங்கள்.

நடித்துப் பாருங்கள் என்றுதான்
சொல்வேன்!
**லிங்கம்** போன்ற நல்ல பணக்காரர்,
**மோகன்** போன்ற முட்டாள் பணக்காரர்,

சிறிது பண சபலத்தால் ஏமாந்த **செல்வி,**
வேதா, சேது, கிட்டு இவர்களைத்
தினமும் சந்திக்கிறோம் தெருவிலே,
திண்ணையிலே, வீட்டிலெல்லாம்.

**கதையில் தடங்கலில்லாத ஓட்டம்!**
**ஆற்றொழுக்குப் போன்ற உரையாடல்.**
**நீண்ட சொற்பொழிவுகளோ, விசாரணைக்**
**காட்சிகளோ இல்லாத விறுவிறுப்பு**
**நாடக முழுதும் இழையோடிக் கிடக்கிறது.**
**நீதி பின்னிப் பிணைந்துப் பூத்துக்**
**குலுங்குகிறது!**

கவிஞர் காவிரிநாடன் தொட்டதெல்லாம்
மணக்கும், அவர் படைப்புகளைச்
சொன்னால் வாய் மணக்கும்.
நினைக்குந் தோறும் தமிழ் மணக்கும்

வாழ்க காவிரிநாடன்!! என வாழ்த்தி
தமிழ்த் தாய்க்கு மேலும் பல்வகை
அணிகள் செய்து சிறக்க வேண்டு
மென்று வாழ்த்துகிறேன்

வள்ளுவர் மனை
சோலை-3

தி. ச. மு. மேகலை
15-9-73.

# கொஞ்சம் நில்லுங்கள்

இந் நூலில் இழையோடும் எவ்வரிகளாவது உங்கள் நெஞ்சைத்தொடுகின்றனவா? தொடவில்லையென்றால் இதைத் தூக்கி எறிந்துவிட்டு மறுவேலை பாருங்கள்

- கா





"வாழ்க்கையில் பாதிக்குமேல் வறுமைச் சேற்றில் உழன்றவள். திக்கற்றுத் திசை தடுமாறி அலைந்த அவள் வாழ்க்கையே ஒரு சோகக் கதை. சந்தேகத்தில் புடம்போட்டு எடுக்கப்பட்ட தங்கம் அவள்! கொள்கையில் எனக்குப் புறம் போயினும் கொண்டவனையே தெய்வமாகக் கண்டவள். அடக்கமுள்ள குடும்பப் பெண்ணுக்கு அவள் நல்ல எடுத்துக்காட்டு. செல்வி – என் இதயக் கோயிலில் கொலுவீற்றிருக்கும் கற்புத் தெய்வமே அவள்!"

— பாலு.



"வாழ்க்கையின் வளமனைத்திற்கும் உழைப்பே மூலதனம். "உழைப்பால் உயர்க உலகு" என்ற இலட்சியப் பாதையை வகுத்துக்கொண்ட, துடிப்புள்ள தோட்டக்கார இளைஞர். காலவெள்ளத்தில் எதிர் நீச்சல் போட்டு வெற்றியும் பெற்றவர். பணத்தாசை பிடித்து அலையும் இந்த உலகில் அவர் ஓர் பண்பின் அவதாரம். 'இன்பமான வாழ்க்கைக்குப் பணமே யன்றி மனமே' என்று வாழ்ந்து காட்டிய என் இதயத் தெய்வம்! கதையின் நாயகர் மட்டுமின்றி என் இதயத்தின் நாயகருமான – **பாலு.**"

**— செல்வி.**



" நாகரிக உலகில் அவருக்குப் பெயர் பணக்காரப் பெரிய மனிதர். ஆனாலும், ஆசைக்கு அடிமைப்பட்ட நடுத்தர வயதுள்ள நல்லவர். தொடக்கத்தில் நப்பாசைக்காரராகவும், இடையில் திருந்தியவராகிக் கடைசியில் கர்ம வீரராகவும் காட்சியளிக்கிறார். செல்வி என்ற நெருப்பால் சீர்திருத்தப்பட்ட செல்வச் சீமான். இலக்கியக் காதலுக்கு இலக்கணமான பாலு – செல்வி இல்லற விளக்கிற்கு எண்ணெயாக இருந்து தன்னைத் தூய்மைப்படுத்திக் கொண்டவர் எஸ்டேட் அதிபர் எஸ். வி. லிங்கம்."

— ஏகாம்பரம்.



"அவர்தான் எனக்குத் தெரிந்த இதயமுள்ள முதல் மனிதர். பிறப்பின் வழிமுறை தெரியாத என்னை வளர்த்து ஆளாக்கிய 'குழந்தைகள் காப் பீட்டகத்தின் காவலர்'. என் பருவத்தைக் காத்து பாலுவுக்குக் காணிக்கையாக்கிய உத்தமர். அனு பவத்தில் மட்டுமின்றி வயதிலும் முதிர்ந்தவர். உழைத்தே உண்ண வேண்டும் என்ற உயர்ந்த தத்துவ ஞானி, என் அன்புத் தாத்தா ஏகாம்பரம்."

— செல்வி.



"சொந்தத்தில் வாழ வக்கற்று இருந்தும் இன்ப சொர்க்கத்தில் வாழ ஆசைப்பட்ட சுயநலவாதி. இல்லாதவனாக இருப்பினும் வல்லவன். நல்லவன் அல்லாதவன். சொத்துக்கும் சுகபோகத்திற்கும் எதையுமே செய்யத் துணிந்தவன். பாலுவும் செல்வியும் வாழும் அதே மண்ணில்தான் மோகனும் வாழ்கிறான். தான் இட்டதே சட்டம் என காட்டுத் தர்பார் நடத்திக் கடைசியில் அழிந்தவன். ஆசைக் கோட்டை மீதேறிய அவனை, அழிவின் அகழிக் குள் தள்ளி அன்பின் ஜோடிகளைக் காப்பாற்றி விட்டேன்."

— வேதா.



"வேதா மோகன் வீட்டு வேலைக்காரி. காலம் கடைசி வரைக்கும் அவளை ஒருவனின் வீட்டுக்காரி யாக்காமல் போய்விட்டதே என்ற வருத்தம்தான் எனக்கு. நாடகத்தின் சூத்திரதாரியே அவள்தான். எனது செயல்களின் வெற்றிக்கு உற்ற துணையான வள். கதையின் ஓட்டத்தோடு கடைசிவரைக்கும் அவள் ஓடுகிறாள். என் இதயத்தில் இடம் பெற்றது போல வாசகர்களாகிய உங்கள் இதயத்தையும் அவள் ஆட்கொள்வது நிச்சயம்."

— சேது.



"ஆண்டவன் படைப்பில் முதன்மை பெற்ற மனித இனத்தில் அவர் ஓர் சர்வ சாதாரண அங்கம். பெயரில் சேதுவாக இருப்பினும் செயலில் சாது அவர். சொல்லிவிட்டுச் செய்வதைவிட, எதையும் செய்துவிட்டுச் சொல்லும் பழக்கம் உள்ளவர். நல்லதுக்காக கடைசியில் தன் உயிரையே தியாகம் செய்த நல்லவர் சேது!"

— ஜான்.



“நட்புக்கு ஓர் மறு உருவம் காட்ட முடியும் என்றால் அது என் நண்பன் ஜான் ஆகத்தான் இருக்க முடியும். வயதில் முதிர்ந்து இருப்பினும் தோற்றத்தில் வாலிபனே. உழைப்பதற்கு என்றே ஆண்டவன் அவனுக்கு அந்தக் கட்டுடலைக் கொடுத் தான் போலும்! நன்றி விசுவாசமுள்ள வேலைக் காரனாக இருந்தும் நடுவினிலேயே கொடியவனால் சுட்டுப் பொசுக்கப்படுகிறான். அவன் தொண்டு வாழட்டும்! அவன் ஆத்மா சாந்தி அடைக!”

— சேது.



“ வரவில்லாமல் செலவுகள் செய்து வாழ்க்கையைக் கேலித்தனமாக அனுபவிக்கும் நவநாகரிக பிறப்புக்கள். எதிர்காலத்தைப் பற்றிக் கவலைப் படாத நிகழ்கால ஹிப்பிகள்! வளர்ந்துவிட்ட குறும்புக் குழந்தைகள் – கல்லூரி மாணவர்கள்! ”

— பாதைவாசி.



"தொழில் முறையில் அவன் எனக்குக் கூட்டாளி. ஒரு வகையில் நாங்கள் இருவருமே மோகனின் கையாட்கள். திருட்டுப் போகும் தெய்வ விக்கிரகங்களுக்கு கர்த்தர்கள் நாங்களே! மோகனின் வெற்றிக்கு எங்கள் துணை பெரிதும் தேவைப்பட்டது. மதத்தில் வேறுபட்டு இருப் பினும் மனதில் ஒன்றுபட்ட தோழனே ஷேக்."

— பூபதி.



"காக்கும் கடவுளின் பிரதிநிதியாக மண்ணுலகத்தில் அவதரித்திருக்கும் டாக்டர் சில சமயங்களில் அழிக்கும் கடவுளின் கையாளாகவும் மாறிவிடாமல் உண்மையை உணரச் செய்து பாலு – செல்வியைப் பிணைத்தவர்."

— எஸ். வி. லிங்கம்.



"எங்களைப் பொருத்த வரையில் நல்லவன், கெட்டவன் என்ற வேறுபாடு எங்களுக்கு இல்லை. பூபதியைப் பொறுத்த வரையிலும் அப்படியே! அறிவு அவனிடம் ஏராளம்! அதைவிட ஆற்றல் அவனிடம் ஏராளம், ஏராளம்!! இவைகள் இருந்தும் அவன் தொண்டு 'விழலுக்கு இறைத்த நீர் போல்' மோகனால் மாற்றப்பட்டுவிட்டது. காரணம் ஏன் என்பதை சிந்திக்கவே இல்லை. காரணம் நாங்களும் அதே குட்டையில் ஊறிய மட்டைகளே."

— ஜார்ஜ் - ஷேக்.



"பாதை தவறி வாழ்க்கை வண்டியை ஓட்டி வழுக்கி விழுந்தவன் டிரைவர் கிட்டு. மோகன் சமூகத்தின் சக்கரமே அவன்தான். வேதாவின் வாழ்க்கையில் குறுக்கிட்டு, வேண்டாத பல தொல்லைகளுக்கு ஆளாகி, கடைசியில் வேதாவின் கரத்தாலே விண்ணுலகப் பயணத்தை மேற்கொண்ட கிட்டுவுக்கு என் ஆழ்ந்த அனுதாபங்கள்."

— ஜார்ஜ்.



"தெய்வச் சிலைகளைத் தெய்வத்தின் சந்நிதானத்தில் களவாடும் கள்ளர்கள் அச் சந்நிதானத்தில் இருக்கும் பெருச்சாளிகளே!"





"உங்களைப் பற்றி எல்லாம் தெரிந்தவர் களிடமே நீங்கள் நடிப்பதுதான் மகா மகா நாடக மாகும்."

— காவிரிநாடன்.

**இடம் :**

பெங்களூர் - லிங்கம் எஸ்டேட்டிலுள்ள
தோட்டம்

**நேரம் :**

*மாலை 5 மணி அளவு*

**உறுப்பினர்கள் :**

*பாலு*

*தாத்தா ஏகாம்பரம்*

*செல்வி*

*எஸ்டேட் அதிபர் எஸ். வி. லிங்கம்*

நிலைமை : [தோட்டக்காரன் பாலு பாட்டொன்றைப் பாடிக் கொண்டே, செடிகளைக் கத்தரித்துக் கொண்டிருத்தல் – தாத்தா ஏகாம்பரம் கையில் சிறிய பெட்டியோடு தள்ளாடித் தள்ளாடி வருதல்—அவருடன் செல்வி கைப் பையுடன் வருதல்].

பாலு : [பாடி முடிக்கிறான்].

ஏகாம்பரம் : [தள்ளாடி நடந்து கொண்டே] அப்பா...... கடவுளே...! [பெருமூச்சு விட்டபடியே உட்காருதல்]

செல்வி : [ஏகாம்பரத்தின் அருகில் நிற்கிறாள்].

பாலு : [வந்துகொண்டே] யாரு கடவுளைக் கூப்பிடறது...?

ஏகாம்பரம் : நான்தானப்பா...... கூப்பிட்டேன்...... அந்தக் கடவுள்...நீதானப்பா...!

பாலு : நீங்க...யாரு...என்னென்னமோ சொல்றீங்க...

செல்வி : எழுந்திருங்க... தாத்தா... வேறு எங்கேனும் போகலாம்...!

ஏகாம்பரம் : எங்கேயம்மா... போறது... இந்தப் பெங்களூரிலே...யாரம்மா...நமக்குத் தெரியும்?

பாலு : ஓ...நீங்க...பெங்களூருக்குப் புதுசுங்களா...? உங்களுக்கு யார் வேண்டும்? யாரைப் பார்க்கணும்?

ஏகாம்பரம் : தம்பீ...! யாரையும் பார்க்கணும்னு வர்றலே... மெட்ராசிலிருந்து வர்றோம்...தங்குவதற்கு இடமில்லாமே தவிக்கிறோம்... உன்னைப் பார்த்தா...நல்ல புள்ளையா தெரியிது... இன்னிக்கு ராத்திரிக்கு மட்டும் இடம் வேணுமப்பா...! [செல்வியைக் காட்டியபடி] ...இம்...ம்... மடியிலே நெருப்பைக் கட்டிக்கிட்டு அலையிறேன்...!

செல்வி : [பாலுவை நோக்குகிறாள்].

பாலு : தாத்தா... கவலைப்படாதீங்க! மடியிலே கட்டிக்கிட்டு இருக்கிற நெருப்பு எப்படி சுடும்னு தெரியும்...! கொஞ்சம் பொறுங்க... ஏதாவது ஏற்பாடு செய்யுறேன்... [யோசிக்கிறான்].

செல்வி : [மெல்ல புன்னகை பூக்கிறாள்].

ஏகாம்பரம் : அப்பா...டா! கடவுள் இருக்கிறாரே... அவர் எந்த ரூபத்திலும் இருப்பாரம்மா! இப்போ...... கடவுள்... நமக்கு இந்தத் தம்பி ரூபத்திலே வந்திருக்கிறாரு......!

பாலு : தாத்தா... எனக்கென்று இருப்பது ஒரே குடிசை...! அதுவும் அவுட் ஹவுஸுக்கு ரொம்ப தூரம்...ம்...ம்... [மீண்டும் யோசிக்கிறான்].

ஏகாம்பரம் : எந்த இடமாத்தான் இருந்தா என்னப்பா...!

பாலு : அந்த அவுட் ஹவுஸிலும் சமையல்காரங்க குடியிருக்கிறாங்க... என் குடிசையோ சின்னக் குடிசை... ...ம்...ம்...

ஏகாம்பரம் : அதனாலே என்னப்பா... குடிசையே போதும்...

பாலு : குடிசையிலே நெருப்பை எப்படித் தாத்தா விடறது...? குடிசையே பத்தி எரிய ஆரம்பிச்சுட்டா...!

செல்வி : [தலை கவிழ்கிறாள்].

ஏகாம்பரம் : தம்பீ... அன்புங்கிற குடிசையிலே... எந்த நெருப்புப் போட்டாலும் தீப்பிடிக்காதப்பா...!

செல்வி : (மெல்ல) ஆமாங்க...உங்க குடிசையிலே தீப் பிடிக்காமல் நான் பார்த்துக்கிறேன்.

பாலு : சரிங்க...தாத்தா...இந்த எஸ்டேட்டின் முதலாளியிடம் ஒரு வார்த்தை கேட்டுக்கிறேன். (போகும் போது லிங்கம் எதிரே வருதல்)

லிங்கம் : [கையிலே கட்டைச் சுருட்டைப் பற்ற வைத்துப் புகைத்துக்கொண்டே] என்ன பாலு? யாரோ... Guest வந்திருக்கிறார்கள்...

பாலு : [தலைப்பாகையை அவிழ்த்துக் கையில் வைத்துக் கொண்டு] ஆமாங்க...... அனாதைங்களா ...?......

மெட்ராசிலே இருந்து வந்திருக்கிறுங்களாம்......?... தங்குவதற்கு...இடம் வேணுங்களாம்...!

ஏகாம்பரம் : [எழுந்துகொண்டே] ஆமாங்க முதலாளி... நாங்க மெட்ராசிலே இருந்து வந்தோ(ம்)...கொஞ்சம் மனம் வைக்கனும்...

லிங்கம் : பாலு! நான் எல்லாவற்றையும் கேட்டுக்கிட்டுத் தான் இருந்தேன்... உன் குடிசையிலே தங்க என்னிடம் அனுமதி கேட்க வேண்டுமா? ...எனக்கொன்றும் ஆட்சேபனேயே இல்லே. I have no objection...

பாலு : எஜமா...... [செல்வியைச் சுட்டிக்காட்டி] அதற்காகத்தான்...யோசிக்கிறே...ன்...

லிங்கம் : What you are thinking?...

ஏகாம்பரம் : தம்பீ .. யோசிக்கிறதும்...நல்லது தானுங்களே...!

லிங்கம் : பெரியவரே...! Self control என்கிற ஆஸ்பெஸ்டாஸ் போட்ட குடிசையாச்சே... எந்தத் தீயும் பிடிக்காது...! என்ன மிஸ்டர் பாலு... Am I correct ?

பாலு: [சிரிக்கிருன்].

லிங்கம் : ஆல்ரைட்... வரட்டுமா? God bless you !. [போகிருர்]

ஏகாம்பரம் : கடவுள் இப்போ...நமக்கு முதலாளி ரூபத்தில் வந்து போருரு...

செல்வி : ஆமாங்க...தாத்தா... நீங்க ஒவ்வொரு உருவத் திலும் கடவுளையே பார்க்கிறவருச்சே !

பாலு : எங்க எஜமான் எஸ். வி. லிங்கம் தங்கமானவரு... எவ்வளவு பெரிய எஸ்டேட்... இவ்வளவு பெரிய எஸ்டேட் முதலாளிக்கு ஒரு மனைவி இல்லே தாத்தா... ம்...ம்...

செல்வி : ஏன் ? மனைவி... தவறிட்டாங்களா...?

பாலு : ஆமாம்...! ம்... கடவுள் ஒரு பூனை தாத்தா... பூனை பாலையும் குடிக்குது... மாமிசத்தையும் தின்னுது... கடவுளும் அப்படித்தான் இருக் கிருர்...

ஏகாம்பரம் : அது எப்படித் தம்பி...? கடவுள் ஒரு புலி தம்பி...! கொடுமைங்கிற மிருகங்களை எல்லாம் பாய்ந்து கொன்னுபோடும் புலிதான் தம்பி...!

செல்வி : [வாய்விட்டுச் சிரிக்கிருள்].

ஏகாம்பரம் : ஏம்மா.. சிரிக்கிறே... நாங்க சொல்றது தப்பா...

செல்வி : இல்லே தாத்தா... எல்லாவற்றிற்கும் அப்பாற் பட்ட கடவுளைப் பூனைக்கும் புலிக்கும் ஒப்பிட்டுப் பேசறீங்களே... அதுக்குத்தான் சிரிப்பு வந்தது...

பாலு : பேசிக்கிட்டே...இருக்கிறோமே...வாங்க... குடிசைக்குப் போவோம்...!

[ஏகாம்பரத்தின் கையிலிருந்த பெட்டியை வாங்கிக் கொள்கிறான். செல்வி அவர்கள் பின்னால் போகிறாள்].

[ திரை ]

**இடம்:**

சென்னை - அண்ணா சாலை

**நேரம்:**

நடுப்பகல் 12 மணி அளவு

**உறுப்பினர்கள்:**

**சேது,** அலி, இரண்டு கல்லூரி மாணவர்கள்

நிலைமை : [சேது சிகரெட் பிடித்துக் கொண்டே பாதையின் ஓரத்தில் நின்று கொண்டிருக்கிறான். அலி ஒருவன் நல்ல உடை அணிந்து, பூச்சூடி கைகளை வீசி நடந்து செல்ல, அவனை இரு கல்லூரி மாணவர்கள், பெண் என்று நினைத்துப் பின் தொடர்கின்றனர். அதைப் பார்த்த சேதுவும் பின் தொடர்கிறான்.]

**அலி :** *[கையில் டம்பர் பையைத் தொங்கவிட்டுக் கொண்டு ஒயிலாகச் செல்லுதல்].*

**மாணவன் 1 :** *நடையா.....? இது நடையா...? அன்ன நடையா...?*

**மாணவன் 2 :** டேய்...20th Centuryஇல் *அன்னம் ஏதடா? வாத்துதாண்டா இருக்குது... வாத்து நடையா... அட...வாத்து நடையா...?*

அலி : *[ 'க்ளுக்' என்று சிரித்தல்.]*

மாணவன் 1 : *இடையா...? இது இடையா? சின்ன இடையா? மின்னல் கொடையா? பின்னல் குடையா?*

மாணவன் 2 : *டேய்... இல்லையடா... செக்குலக்கை இடையே... பெரிய இடையே...!*

மாணவன் 1 : *சடையா... இது ஒரிஜினல் சடையா?*

மாணவன் 2 : *இல்லை...சௌரி...இரவல் சௌரி.*

மாணவன் 1 : Fool...What a beautiful she is...! *அழகை ரசிடா...* don't discourage...

மாணவன் 2 : Beauty-*ஐ ரசிக்கக் கூடாதுடா... அப் படியே கண்களால் சாப்பிட்டு* Brain-*இல்* Digese *பண்ணனும்டா.*

மாணவன் 1 : *போடா* Country... *டைஜஸ் பண்றதும் அப்ஸார்ப் செய்யறதும் காலேஜிலே வைச்சிக்கடா... வெளியே வந்துவிட்டால் ஜாலியா இருக்கனும்...* Now...*இவளை ரசிக்கத் தெரிஞ்சுக்கடா.*

சேது : *ஓ ..!* College Students... *கல்லூரிக் கட்டிளங் காளையர்களே... இப்படியல்லவோ படிக்கனும்... வருங்காலத் தலைவர்களே... ! இதோ... நானும் வந்துட்டேன்... [ அவர்களோடு சேர்ந்துகொள் கிறான் ].*

மாணவன் 1 : [சேதுவை நோக்கி] ஹலோ... Are you a Student community...!

சேது : Yes. My dear காம்ரேட்ஸ் !

மாணவன் 2 : அவள் பின்னழகை – பின்னல் அழகை எப் படிச் சொல்வோமடா? அட! எப்படிச் சொல் வோமடா ?

சேது : மிஸ்டர்...அவள் முதுகைப் பாருங்கோ...

மாணவன் 1 : முதுகிலே என்ன ரசனை? கொஞ்சம் கீழே பாருங்கோ. இடையின் நெளிவு...அதில் ஒரு சுளிவு... நல்ல தெளிவு...ஆஹா...என்ன கனிவு ?

சேது : நோ...நோ...மிஸ்டர் .. அவள் முதுகினிலே ஓ மச்சம்... என்ன அச்சம்... அழகு மிச்சம் !

மாணவன் 2 : தமிழ்...! ஐயோ ! தமிழ் ! ஏண்டா தமிழ் பேசறே...

சேது : ஐயோ...போலீஸ்...போலீஸ்...

மாணவன் 1 : தமிழ்...வாழ்க...! தமிழ்...வாழ்க !

சேது : [சிரித்தபடி] இதுதான் உங்கள் மொழிப் போராட்டமா ?

மாணவன் 2 : பூசையிலே...கரடி... Follow.....Follow..... Follow the Girl...!

சேது : Follow...Follow...மிஸ்டர்...Please... அவள் முதுகிலே மச்சம் இருக்குதான்னு பாருங்கோ...Please... பாருங்கோ...!

மாணவன் 1 : கலையை அணு அணுவாகச் சுவைத்துக் கொண்டிருக்கிறோம்...அட முட்டாளே...கிடைத்தற்கரிய நேரத்தில்...எதை எதையோ பேசுவது... அறமா...?

மாணவன் 2 : நியாயமா...தருமமா...Follow...Follow...

சேது : ஆ...ஹா... ஊர்வசி....திலோத்தமை.....ரம்பை.... மேனகா...மேகலா...கோகிலா...சசிகலா...வசிகலா...

மாணவன் 1 : ஐயோ...! அவள் திரும்பவில்லையே...

மாணவன் 2 : கண்ணே...!

சேது : பெண்ணே...!

மாணவன் 1 : புண்ணே...! திரும்பிப் பார்க்க மாட்டாயா! கொஞ்சம் முன்னழகைத் திருப்பிக் காட்ட மாட்டாயா ?

சேது : மாட்டாயா...... எங்களிடம் மாட்டிக்கொள்ள மாட்டாயா ? கொஞ்சம் போலீசில் மாட்டிவைக்க மாட்டாயா ?

மாணவன் 2 : Come...Come ..My...Lady...Come on my lady...Open your mouth...wonderful laugh...

சேது : ஆஹா... என்ன பாட்டு...

மாணவன் 1 : வள்ளுவர் சொன்னார்... இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே...

சேது : என்ன...சொன்னார் ?

மாணவன் 2 : ஆண்கள்....சைட் அடிக்கும்போது....அவள் நிலத்தைப் பார்ப்பாளாம்...அதுதான் காதலுக்குரிய இன்டிகேஷன்...!

மாணவன் 1 : ஓ... You are correct... Hundred percent correct...அவள்...இப்போ...நம்மை...லவ்...பண்றாள்.

மாணவன் 2 : ஓ...My dear...My Darling... My favourite My pet...My Heart...My sweet...Please...திரும்பிப் பார்...

சேது : திரும்பிப் பார்...... நடந்து வந்த ரோடுகளைத் திரும்பிப் பார்... எங்களைக் கொஞ்சம் விரும்பிப் பார்...!

அலி : [திரும்பிப் பார்த்தல்].

மூவரும் : ஓ....மை....God....மை....God....ஓ....மை...God·
[மூவரும் திரும்பிப் பார்க்காமல் ஓடுகிறார்கள்].

[ திரை ]

அறிவு எல்லோரிடமும்,
அழகு பலரிடமும்,
அன்பு சிலரிடமும்,
அருள் வெகு சிலரிடமும்,
அந்த நான்கும் அடங்கிய
மனிதப் பண்புகள் ஓர்
இருவரிடமே உள்ளன.

— காவிரிநாடன்.

**இடம் :**

மோகன் எஸ்டேட்

**நேரம் :**

*பிற்பகல் 3 மணி*

**உறுப்பினர்கள் :**

மோகன், வேலைக்கார ஜான்,
டிரைவர் கிட்டு, வேதா, சேது.

நிலைமை: *[மோகன் வேலைக்காரனை அழைத்தல். அவன் உடனே வராததால் அவன் மீது டேபிள் வெயிட்டை எடுத்து எறிதல். வேலைக்காரனுடைய நெற்றியிலிருந்து இரத்தம் கொட்டுதல்]*

மோகன்: *[சுழல் நாற்காலியில் உட்கார்ந்தபடி* Calling *மணியை அழுத்துகிறான்].* டேய்,..ஜான்...ஜான்... *[பலத்த குரலில்]* ஜான்...Fool...Idiot...Nonsence... எங்கேடா போனே...!

ஜான்: எசமான்...கூப்பிட்டீங்களா.... *[நடுங்கிக்கொண்டே கைகளைக் கட்டிக்கொண்டு நிற்றல்]*

மோகன்: *[டேபிள் வெயிட்டை எடுத்து எறிகிறான்]* Fool....இடியட்....நான்சென்ஸ்.... பெல்லடித்தால் உடனே வரவேண்டாமா...

**ஜான்:** *[நெற்றியில் வழியும் இரத்தத்தைத் துடைத்துக் கொண்டே]* சிம்மி நாய்க்கு...பிஸ்கட் போட்டுக் கிட்டு இருந்தே...

**மோகன்:** Get out... I don't want your explanation... Get...out.

**ஜான்:** எசமான்....வெளியே.....போகத்தான்.....போறேன். ஆனு...இப்போ இல்லே. உங்க சோத்தைத் திண்ண துக்கு...செஞ்சோத்துக்கடனைக் கட்டாமல்...எப்படிப் போறது ...? அந்தக் கடனைக் கட்டிவிட்டு.....ஒரேயடியா போயிடுவேன்...

**மோகன்:** Furtherஆ...பேசிக்கிட்டு இருந்தே... *[துப்பாக்கியினை எடுத்து நீட்டுகிருன்]*

**ஜான்:** *[பின் நோக்கியே போய்விடுகிருன்]*

**மோகன்:** *[Calling Bell-ஐ மீண்டும் அழுத்துகிருன்]*

**வேதா:** *[கையில் துடைப்பத்துடன் வருதல்]* எசமான் யாரைக் கூப்பிட்டீங்க...

**மோகன்:** நான்சென்ஸ்...இடியட்...Get out...

**வேதா:** *[போகிருள்]*

**மோகன்:** Calling Bell-ஐ *மீண்டும் அழுத்தி]*

**டிரைவர் கிட்டு:** *[மேல் மூச்சு வாங்க]* எஜமான்...எஜமான்...

**மோகன்:** *[கிட்டுவின் சட்டைக் காலரை இழுத்துப்பிடித்து]* நான்சென்ஸ்...இடியட்...

கிட்டு: இல்லீங்க......எஜமான்......இல்லீங்க எஜமான்......
[நடுங்குதல்]

மோகன்: நான் பெல்லில் வைத்த விரலை எடுப்பதற்குள் வந்து முன்னால் நிற்க வேண்டும் என்று தெரியும் அல்லவா...? Why Late...? Why Late?

கிட்டு: எஜமான்...மன்னிச்சுடுங்க...காரைத் துடைச்சிக்கினு இருந்தேன்...

மோகன்: Don't talk...go...and take the car...

கிட்டு: [நடுங்கியபடியே ஓடுகிறான்]

மோகன்: [எதிரே மோதிய நாற்காலியை எட்டி உதைத்துத் தள்ளிவிட்டுப் போதல்]

வேதா: அடா...அடா... சிட்டுக் குருவிக்குப் பட்டம் கட்டினால்...வாலை...வாலை...ஆட்டுமாம்...

ஜான்: அந்த வாலை...ஒட்ட நறுக்கிப் போடுலே...நான்... ஜான் இல்லே...

வேதா: இல்லே... முழம்னு வெச்சிக்கோ... ஓ...ஜானு... ரத்தம் சொட்டச் சொட்ட உழைக்கிற ஆளு...நீ... ஒரு ஆளுதானய்யா...! ஐயோ...பாவம்! ஏய்யா... இப்படி மாடாட்டம் அடிபடனும்...

ஜான்: ஏய்...வேதா...சிந்தற இரத்தத்துக்கு ஒருநாள் ஒரு பலன் கிடைக்கும்!

வேதா: பலன் கிடைக்கும்...கிடைக்கும்... இப்பத்தான் கைமேலே கிடைச்சு...நெத்தி மேலே வழியுதே...

ஜான்: ஏய்...ஆறிலும் சாவு...நூறிலும் சாவு... என்ன நேர்ந்தாலும்...உனக்கார்கத்தான்...

வேதா: என்னய்யா....சொன்னே.... 'இம்'முன்னு மூச்சு விடமுடியாதவன்...கழுதையாட்டம் சத்தம் போட்டாளும்...! ஏய்யா... ஆறுலே செத்தா ஒன்னுமில்லே...நூறுலே போனாலும் நஷ்டமில்லே... ஆறுக்கும் நூறுக்கும் இடையிலே சாகக்கூடாதய்யா... சாகக்கூடாது...!

ஜான்: ஆமா...வேதா...புண்பட்டுப் போயிட்டேன். உன் கைபட்டுவிட்டால்...

வேதா: ஏய்யா...சாணு...முழம்...ஆட்டுக்கு வாலே அளந்து வைச்சிருக்கும் போதே இப்படி ஆட்டறே... உனக்கென்னய்யா ஆசை...மீசையைப் பாரு மீசையை !

ஜான்: அப்படிச் சொல்லாதே...ஊர்கிற எறும்பு ஜோடியா இருக்குது... நீந்தற மீனு ஜோடியாப் போகுது... பறக்கிற பறவை இணையாப் பறக்குது... நடக்கிற நாய் கழுதை துணையோட நடக்குது... காத்துலே திரியற கிருமிகள் கூட ஜோடியாத் திரியுது... நாம மட்டும் அப்படி இல்லேன்ன...!

வேதா: அதுகளுக்குள்ள அறிவும் உனக்கு இருக்கிற அறிவும் ஒரே அளவுதானய்யா... ஆனு...நான்...மனுஷி அய்யா...மனுஷி...

ஜான்: அப்படிச் சொல்லாதே வேதா...நான் செத்திடு வேன்...அப்புறம்...

வேதா: நீ செத்தா என்னய்யா......காடெல்லாம் எலும் பாயிடுமா... சரித்தான் போய்யா...!

சேது: [டிப்டாப் உடையுடன் வருதல்] வேதா...ஹலோ வேதா... என்ன சௌக்கியமா ?

வேதா: ஓ...நீங்களா ? வாங்க...வாங்க... [நாணிக்கோணி நிற்றல்]

ஜான்: [வேதாவை மறைத்துக்கொண்டு நிற்கிறான்] சேது... ஐயாவா...துப்பறியும் நிபுணரா...?

வேதா: [ஜானைத் தள்ளிவிட்டு] நீ ஏய்யா...நந்தியாட்டம் முன்னே...முன்னே வந்து நிற்கிறே...

ஜான்: சேது...ஐயாவை... நீ ஏன்...அப்படி முறைச்சு முறைச்சுப் பார்க்கிறே...! என்னையல்லவா...அப் படிப் பாக்கனும்...

சேது: மிஸ்டர்...ஜான்...நீ சொல்வது...கரைக்ட்... ஏய் வேதா... நீ அவனையே நோக்கு...

வேதா: முடவன் கொம்புத் தேனுக்கு ஆசைப்பட்டு நாக் கைச் சப்பிச் சப்பிப் பார்த்தாலும்...! ஓய்...ஜானு... தலைப் பேனு... உன் வேலையைப் பாரய்யா...

சேது: வேதா......ஜான்......இருக்கிறானே......அவன்கிட்டே மோகன் எஸ்டேட்டின் அந்தரங்க சரித்திரமே

அடங்கிக் கிடக்குதாம்...! அவனைப் போய் அனுவசிய மாய்ப் பேசாதே...! ஜான்..! வேதா...கிடக்கிருள்... நான் இருக்கிறேன்...கவலைப்படாதே...

ஜான்: நீங்க இருந்து என்ன பிரயோசனங்க...எனக்கு வேதாதான் வேணுங்க...வேதா தான் வேணுங்க...

சேது: வேதாதானே உனக்கு வேணும்... வேதா... [ஜான் நெற்றியைப் பார்த்து] ஐயோ ஜான்...! என்ன நெற்றியில்...

வேதா: எஜமான் கொடுத்த பரிசு...வெற்றித் திலகம்...!

ஜான்: வேதா... என்னைக் கிண்டலா பண்றே... நான் நினைச்சா.... உங்க எசமான்...இந்த எஸ்டேட்.... எல்லாம் என்ன கதி ஆகும் தெரியுமா...

சேது: ஜான்...! கோவிச்சுக்காதப்பா... வேதா ஜானைக் கவனிச்சுக்கோ...!

வேதா: துடைப்பக்கட்டைக்குப் பட்டுக் குஞ்சமா...?

ஜான்: அந்தத் துடைப்பம் இல்லேன்னு...வீடு நாறிப் போயிடும் தெரியுமா...?

சேது: ஜான்...! இப்போ......வேதா......அப்படித்தான்... பேசும்... போகப் போக சரியாய் விடும். மனம் தளராதே...விடாமுயற்சியாய் லவ் பண்ணு...! Try your level best...

ஜான்: எறும்பு ஊர...ஊர இரும்பும் தேயும்... வேதாவை அப்படித்தான் கரைக்கணும்...வேதா...வேதா...

சேது: வேதா...வரட்டுமா...

வேதா: ஐயோ...அதுக்குள்ளே போறீங்களா...

ஜான்: பின்னே எப்போ போறது... அவருக்கு எத்தனையோ...வேலை... போறதைத் தடுக்காதே !

சேது: இல்லை...வேதா...இன்னும் நூறு வருசம் வாழ்ந்திட்டுத்தான் போவேன்...... அதுக்குள்ளே...சாக மாட்டே... கவலைப்படாதே. [போகிறுன்]

ஜான்: வேதா...வேதா...போடு...ஒரு சாதா...இருக்கலாம் ரொம்ப தோதா...

வேதா: [கரண்டியை எடுத்துக்கொண்டு அடிக்க...] போய்யா...சோதா... [ஜான் ஓடுதல்.]

[ திரை ]

காலம் கனியும் போதும்
கடமை முடியும் போதும்
காதல் நிகழும் போதும்
கருத்து நிறைவுறும் போதும்
முழுமை பெறுகின்ற மாந்த
னுக்கு வெற்றி மட்டும்
நிரந்தரமாவதில்லை.

— காவிரிநாடன்.

**இடம் :**

தோட்டத்திலுள்ள குடிசை

**நேரம் :**

*மாலை 5–30 மணி*

**உறுப்பினர்கள் :**

பாலு, செல்வி, லிங்கம், ஏகாம்பரம்.

நிலைமை : [செல்வி தனியே குடிசையில் இருக்கிறாள். எஸ்டேட் முதலாளி லிங்கம் குடிசைக்கு வருதல்... செல்வியைக் காதலிக்க முயற்சித்தல்]

லிங்கம் : [கையில் புகையும் கட்டைச் சுருட்டுடன்] பாலு... பாலு...!

செல்வி: அவர்...இல்லீங்களே...!

லிங்கம்: தாத்தா... ஏகாம்பரம்...!

செல்வி: அவரும் தாத்தாவும் கிழக்குப் பங்களா...தோட்டத்திலே வேலை செஞ்சுகிட்டு இருக்காங்க......

லிங்கம் : ஓ....ஒருவருமே.....இல்லையா.....? ஆல் ரைட்..... [திரும்பிப் போதல்... மீண்டும் திரும்பி வந்து] செல்வி...குடிசை...வசதியா யிருக்கா...?

செல்வி: [சிரித்துக் கொண்டே] ஓ...இருக்குங்களே...!

லிங்கம்: சாப்பாட்டுக்கு...எல்லாம்...இருக்கிறதா...?

செல்வி: எல்லாப் பொருளும் வைச்சிருக்காருங்கோ !

லிங்கம்: எது இல்லையென்றாலும் Immediate...டா...பாலு விடம் சொல்லி அனுப்பு...இல்லை...நம்ம Cookகிடம் கேட்டாலும் கொடுப்பான்...எதுவும் இல்லையேன்னு இருக்காதே...

செல்வி: தனி மனிதராயிருந்தாலும் ஒரு குடும்பத்துக்கு என்னென்ன தேவையோ...அத்தனையும் வைச்சிருக் கிறாரு...

லிங்கம்: அப்படியா...? Very good...!

செல்வி: [சிரிக்கிறாள்]

லிங்கம்: செல்வி என்ற பெயருக்கு ஏற்ப...அழகாகச் சிரிக் கிறாய்... Very nice...

செல்வி: [மீண்டும் சிரிக்கிறாள்]

லிங்கம்: செல்வி...நீ வந்தது முதல்...இந்த எஸ்டேட்... புதிய வடிவம் பெற்றிருக்கிறது...

செல்வி: உண்மையாச் சொல்றீங்களா...?

லிங்கம்: ஆமாம் செல்வி...இந்த எஸ்டேட்டிலே World-லே இருக்கிற அத்தனைப் பூச்செடிகளையும், கொடிகளை யும் கொண்டு வந்து அழகு செய்திருக்கிறான் பாலு.

தினம் தினம் அந்த இயற்கை அழகை ரசிக்க முயற்சிக்கிறேன்... என்னமோ... அதை ரசிக்க முடியவில்லே... எத்தனைக் கோடி பூக்கள் கூட்டம்... எத்தனை வகை பூங்கொடிகள்? ஒன்றையுமே ரசிக்க முடியவில்லே செல்வி...ரசிக்க முடியலே...

செல்வி: காரணம்...?

லிங்கம்: Monotonous life... மனோட்டனஸ் லைப்...

செல்வி: என்ன சொல்றீங்க...

லிங்கம்: மெலங்கலி சாங்க்...மெலங்கலி சாங்க்...அதோ... ஒற்றைக் குயில் புலம்பிக்கிட்டு இருக்கிறதே... சோகப்பாட்டு...

செல்வி: சோகப் பாட்டை...இன்ப கீதமாக மாற்றிக்கக் கூடாதா...?

லிங்கம்: பத்து தலைமுறைக்கு உட்கார்ந்து சாப்பிடலாம். அவ்வளவு சொத்து... என்ன செய்வது...? எஸ்டேட்டிலே எத்தனையோ கொடிகள் இருந்தாலும் துணையிங்கிற ஒரு பூங்கொடி இல்லையே...செல்வி... செல்வி...

செல்வி: என்னுங்க...?...

லிங்கம்: ஒன்னுமில்லே...Nothing...தண்ணீர் வேண்டும்...!

செல்வி: ஏழைக் குடிசையிலே தண்ணீ கேட்கறீங்களே...

லிங்கம்: ஏழைக்குடிசை தண்ணீராயிருந்தாலும் பணக்கார பங்களாவின் தாகத்தைத் தீர்க்காமலா போய் விடும்...!

செல்வி: [தண்ணீர் கொண்டு வந்து கொடுக்கிறாள்]

லிங்கம்: [தண்ணீரை வாங்கிக் குடிக்கிறார்...புரை ஏறுதல்...தடுமாறுகிறார்]

செல்வி: [பயந்து நிற்றல்]

ஏகாம்பரம்
பாலு } [இருவரும் வருகிறார்கள்]

பாலு: முதலாளியா...! [வியப்போடு கேட்கிறான்]

ஏகாம்பரம்: முதலாளிக்கு...நூறு வயசு... உங்களைப் பத்தித் தான் பேசிக்கிட்டு வந்தோம்...!

லிங்கம்: பாலுவைக் காலையிலிருந்து பார்க்கவில்லையே.

பாலு: ஆமாங்க முதலாளி...கொஞ்சம் வேலை அதிகமாயிருந்தது...

லிங்கம்: அதனாலேதான் நானே உன்னைப் பார்க்க வந்தேன். என்ன.... தாத்தா...... உங்கள் பேத்தி கெட்டிக்காரப் பொண்ணு...ரொம்பக் கெட்டிக்காரப் பொண்ணு...

பாலு: [சிரிக்கிறான்.]

**ஏகாம்பரம்:** செல்வி இருக்குங்களே......அவ......செல்வம் என்கிற ஒன்றைத் தவிர...மற்ற எல்லாவற்றிலும் செல்விதானுங்க...

**லிங்கம்:** *[சிரிக்கிறார்]*

**பாலு:** முதலாளி...! கிழக்குப் பங்களாத் தோட்டம் பிருந்தாவனம் போல் இருக்குது...! அவ்வளவு நேர்த்தியான வேலை.

**லிங்கம்:** பாலு...எப்பொழுதுமே...கடமை வீரன் இல்லே... தாத்தா...?

**ஏகாம்பரம்:** ஆமாங்க...நானு வந்த நாளிலிருந்தே பார்க்கிறேன். ஒரு நிமிஷத்தைக்கூட வீணைக் கழிக்கிறதே இல்லே. எறும்பாட்டம் சுறுசுறுப்பு...தேனி மாதிரி உழைப்பு ..

**பாலு:** கடமையில் காணுகின்ற இன்பம் மற்றவற்றில் எனக்கு இல்லீங்களே தாத்தா...!

**லிங்கம்:** Always Dutyதான்...! இந்த எஸ்டேட்டில் எத்தனையோ Gardeners வந்தார்கள்...இருந்தார்கள்... போனார்கள்...! பாலுவைப் போல் ஒரு தோட்டக் கலைஞனை நான் பார்க்கவில்லை... பாலுவை என் பிள்ளையைப் போலவே நினைக்கிறேன். He is too sincere...too sincere...

**ஏகாம்பரம்:** முதலாளி...பாலுன்னு பேரு வைச்சவங்க வாயிலே பஞ்சாமிர்தம் போடணும் . கடவுள் எப்படி

எப்படியோ...எந்தெந்த ரூபத்திலே இருந்தாலும்... இதுபோல முதலாளி, தோட்டக்காரன் ரூபத்திலே இருக்கிறுரு...இல்லீங்களா.. ? எசமான் !

லிங்கம்: *[சிரித்துக் கொண்டே]* Correct...You are very correct... ஓ. கே. வரட்டுமா...! *[செல்வியைப் பார்த்துக் கொண்டே திரும்பிப் போகிறுர்]*

[ திரை ]

**இடம் :**

பாதை ஓரத்தில்

**நேரம் :**

இரவு 8 மணி

**உறுப்பினர்கள் :**

வேலைக்கார ஜான், சேது,
டிரைவர் கிட்டு.

நிலைமை : [ஜான் நெற்றியில் கட்டுடன் வருதல் – டிரைவர் கிட்டு கவலையோடு வருதல் – மோகனைப் பற்றிப் பேசுதல் – அவர்கள் இருவரும் பேசுகின்ற பேச்சை சேது மறைந்து கேட்டல் – மூவரும் சேர்ந்து கொடுமையாளனை ஒழிக்க வழி தேடுதல்]

ஜான்: [நெற்றியில் கட்டியிருக்கும் பேண்டேஜைத் தொட்டுப் பார்த்துக் கொண்டே வருதல்]

கிட்டு: [எதிரே வந்து கொண்டே] ....அட...,டே....ஜான் அண்ணுச்சியா...எங்கே போயிட்டு வர்றீங்க...

ஜான்: டாக்டர் கிட்டே போயிட்டு வர்றேன் கிட்டு... வலி.....அதிகமா.....யிருந்தது.....ஊசி போட்டாரு.... மருந்து கொடுத்தாரு...பீஸ் வாங்கிஞரு...கொஞ்சம் சுமாரா...இருக்கு...

கிட்டு: அண்ணாச்சீ... நீங்க....இப்படி....அடிபட்டுக்கிட்டு .. கஷ்டப்படறது...எதுக்கின்னே ?

ஜான்: கிட்டு.....எனக்கு விவரம் தெரிந்தது முதல்...... இந்த எஸ்டேட்டிலே காலத்தைக் கழிச்சுட்டேன்... என்னமோ...தெரியிலே... நான் இந்த எஸ்டேட்டை விட்டுப் போவ முடியிலே ..எஸ்டேட்டும் என்னை விட்டுப் போக மாட்டேன்குது.

கிட்டு: முதலாளி மோகனிடம் ஒரு நிமிஷத்தைத் தள்ள றதே...ஒரு யுகமா...இருக்குதுன்னே...! நீங்க எப்படி இவ்வளவு காலமா...இருக்க முடியுதுன்னே !

ஜான்: என்னமோ...காலம் போவுது...வயசும் போவுது...

கிட்டு: அண்ணாச்சீ...கேட்கிறேன்னு கோவிச்சுக்க மாட்டீங் களே.... நம்ம வேதா....இருக்குதே. ..அதைப்பத்தி என்ன நினைக்கிறீங்க ..

ஜான்: கிட்டு... வேதாவே...இல்லேன்னு.. என் லைப் போர் அடிச்சிருக்கும்...

கிட்டு: உண்மைதானுங்களான்னே...?

ஜான்: இப்போ என்னைப் பார்த்து...என்ன நினைக்கிறே... [மீசையை முறுக்கி விடுகிருன்]

கிட்டு: ஆம்பிளையின்னு...நினைக்கிறேன்னே...

ஜான்: ஆம்பிளையின்னு...இப்பதான் நினைக்கிறயா.. எனக்கு இப்போ...என்ன...வயசு...இருக்கும் ?

இட்டு: உங்க ஜாதகத்தைக் கொண்டு வாங்க... பார்த்துச் சொல்றேன்னே...!

ஜான்: எனக்கு...இப்போ...வயசு...ஐம்பது...

இட்டு: ஐம்பது! உங்களுக்கு...வயசு...ஐம்பது!! அண்ணாச்சீ... ஏதாச்சி காயகல்பம் சாப்பிடறீங்களா? முப்பது வயசு இருக்குமோன்னு...நினைச்சேன்னே...

ஜான்: கிட்டு...இந்தக் காலத்திலே...ஆளை வச்சு.. வயசைக் கண்டு பிடிக்க முடியாதப்பா...வயசை மாத்தரத்துக் குத்தான் எல்லாச் சாமான்களும் கிடைக்குதே...

கிட்டு: அண்ணாச்சி..... ஒரு வார்த்தை......வேதா.. . சின்னப் பொண்ணு.. .. அவளை நீங்க லவ் பண்றது. ...சரி யான்னே...

ஜான்: கிட்டு...லவ்...பண்றது...என்பது பெரிய பிரமாத மான காரியமில்லே...யாரு வேணும்னாலு...யாரை வேணும்னாலும் லவ் பண்ணலா .. வயசை யெல்லா பார்க்கப்புடாது ..இப்போ ..ஜாக்குலின், ஒனாசிஸ்னு கிழவனை கோடீஸ்வரனைக் கல்யாணம் பண்ணிக் கிலையா .. வாலிபன் கிழவியைக் கல்யாணம் செஞ்சுக் கிறது இல்லையா..? அதுக்கு கண்ணாவது . மூக்காவது...

கிட்டு: அப்போ ..அதுக்கு ஒண்ணும் தேவை இல்லையினு சொல்றீக ..

ஜான்: கிட்டு....நீ யாரையாவது லவ் பண்ணிறியா....? டிரைவர்க்கெல்லாம்....அதெல்லாம்.....சாதாரண மாச்சே...

கிட்டு: இம்.... அதையேன்...கேட்கிறீங்க...முதலாளியோட எத்தனையோ...அழகான பொம்பளைங்க...வர்றாங்க... போறாங்க... காலையிலே ஒருத்தி.. வர்றா...மாலையிலே ஒருத்தி வர்றா......கணக்கே இல்லே......எவளை லவ் பண்றதுன்னே...

ஜான்: கிட்டு...அதெல்லாம் பெரிய இடத்து சமாச்சாரமப்பா...உன் அந்தஸ்துக்காப் பார்த்துக்கோ...

கிட்டு: அண்ணாச்சி...உங்களுக்கு விஷயம் தெரியாதுன்னே . ! பெரிய இடத்துலே வேலை செய்யற டிரைவர் எல்லாம்...பெரிய இடத்துப் பெண்களை சவாரி பண்ராங்கின்னே... அதை நினைச்சுத்தான் வந்தே . பிரயோசனமில்லையே...

ஜான்: கிட்டு . இந்த எஸ்டேட்டிலே எத்தனையோ கதைகள் நடந்திருக்கு.... நடந்துகிட்டு இருக்கு. அந்தக் கதையிலே...நீயும் இடம் பெறலாமுன்னு...ஆசைப்படறே...அது . நடக்காதப்பா ..

கிட்டு: அண்ணாச்சி . கதை நடக்கிறதுக்கு என்ன இருக்குதுன்னே . எஸ்டேட்டுக்குன்னு .. ஒரு முதலாளியம்மா...அந்த அம்மாவுக்கு ஒரு அழகான...பெண்... ஒன்றுமே ..இல்லேன்னே...

ஜான்: இந்த எஸ்டேட்டுக்குன்னு ஒரு பொண்ணு இருக்கா...ன்னே . !

கிட்டு: நான் இல்லேங்கறே...ன்னே...!

சேது: [வந்துகொண்டே] நானும் இல்லேங்கறே...ன்னே... !

ஜான்: அந்தப் பொண்ணைத் தேடிக்கிட்டு இருக்கிறது எனக்கும் தெரியுமி...ன்னே...

சேது: ஓ My God... உனக்கும் அந்த விஷயம் தெரியுமா.. ன்னே...!

கிட்டு: சேது ..சார்...அப்படியின்னு ! அந்தப் பொண்ணை... எனக்குக் காட்டுங்கின்னே .. நான் லவ் பண்ணறே ..ன்னே...!

ஜான்: சேத்தய்யா.....கிட்டுவுக்கு அந்தப் பொண்ணைத் தேடிக் கொடுங்கின்னு..

சேது: டேய்...கிட்டு ..லூஸூ...

கிட்டு: நெட்டு லூசுங்களா ..ன்னே...ஸ்பேனரை எடுத்துக்கிட்டு வரட்டுங்களா.. ன்னே.. !

ஜான்: ஒன்னு......வரவேண்டா..... நீ போனல் போதுமி...ன்னே!

கிட்டு: அண்ணச்சி.. போகச் சொல்றுங்க... நான் போயிட்டு வரேங் ..கின்னே...!

சேது: ஓய்...கிட்டு...போய்த் தொலையயா...... உனக்கு எஜமானியம்மாவை தேடிக் கண்டு பிடிச்சுக்கொண்டு வர்றேன் தயாரா...இரு... போடா...பிரேக்கு...

கிட்டு: சேது ..சார்...தயாரா இருக்கே...ன்னே...!
[போகிறுன்]

ஜான்: உம்... உலகம் எப்படி எப்படியோ போவுது...

சேது : இப்படித்தான். ..போவட்டுமே.... ஜான்...நா...ன் அமெரிக்கா போகப் போறே...

ஜான்: எப்போ...போகப் போறீங்க...!

சேது : நாளைக்கே...போகப் போறேன்...!

ஜான்: அதுக்குள்ளே.....வேதாகிட்டே.....என்னைப் பற்றிச் சொல்லி...கல்யாணத்தை முடிச்சுட்டு ..போயிடுங்க...

சேது : ஜான்....என்னல்,...எப்படி. ..வேதாகிட்டே சொல்றது ? அவளை நீதான்...கேட்கனும்...

ஜான் : நான் கேட்பதைப் பற்றி .....இல்லீங்களே......நீங்க சொன்னு அவள் மதிப்புக் கொடுப்பா...!

சேது : ஜான்...உனக்கு விஷயம் புரியலையே...Suppose... நான் அவளிடம் சொல்றேன்னு வெச்சுக்கோ... அவள்...எனக்கு ஜானைப் பிடிக்கல்லே.....உங்களைத் தான் லவ் பண்றேன்னு சொல்லிட்டா...உனக்கு... ரொம்ப Shame ..

ஜான் : சேத்தய்யா.. . நீங்க இப்படிச் சொல்லக்கூடாது... வேலைக்காரி......வேலைக்காரனைத்தான் லவ் பண்ணணும்....முதலாளி.....முதலாளியம்மாவைத்தான் லவ் பண்ணனும்...

சேது : ஜான்......அதெல்லாம். ....பழசப்பா......இப்போ..... ஆம்பளை ஆம்பளையதத்தான் லவ் பண்ணனும்...பொம்பளை பொம்பளையத்தான் லவ் பண்ணனும்...நீ என்னைத்தான் காதலிக்கனும்...நான்... உன்னைத்தான் காதலிக்கனும்...புதிய Tradition-ஐப் பரப்பனும்...

ஜான் : அதெப்படி...முடியும் ? விதண்டாவாதம் பேசு றதே...உங்களுக்கு வேலையாப் போச்சு...

சேது : விதண்டாவாதமா...? ஜான்...இந்த எஸ்டேட்டிலே எத்தனேயோ தண்ட வாதம் நடக்குது. பாரு...இந்த எஸ்டேட் அந்தரங்கத்தை ரொம்ப நாளா கேட்டுக் கிட்டு வர்றேன்... நீ சொல்ல மாட்டேங்கறே...

ஜான் : சேத்தய்யா ..எசமான் வந்திடுவாரு...நேரமாச்சு... வர்றேன்... [போகிருன்]

சேது : நீயா சொல்ல மாட்டே....உன்னே சொல்ல வைக் கிறேன் நான். [போகிருன்]

[ திரை ]

இலட்சியம் பேசுகின்றவனும்,
இலக்கணம் எழுதுபவனும்,
இறைவனைத் துதிப்பவனும்,
இளமையைச் சந்திப்பவனும்,
இருட்டை விரும்புபவனும்
அடிக்கடி தவறுவார்கள்!
அவர்களைத் திருத்துவது யார்?

– காவிரிநாடன்.

**இடம் :**

மோகன் பங்களா

**நேரம் :**

இரவு 9 மணி

**உறுப்பினர்கள் :**

மோகன், ஜார்ஜ், பூபதி, சேது, கிட்டு.

நிலைமை : [மேஜையின் மீது, வெளி
நாட்டு மது வகைகள் – மூவரும்
ஊற்றிக் குடித்தல் – சேது
புகைத்துக்கொண்டே இருத்தல்]

மோகன் : ஜார்ஜ்...ஹாங்ஹாங்கிலிருந்து வரவேண்டிய Jewels Matter என்னாச்சு?

ஜார்ஜ் : மிஸ்டர் பூபதி...என்னாச்சு...?

பூபதி : I think that will take time... ஹாங்ஹாங்கிலிருந்து Start ஆன Planeலே டைம் பாம் இருக்குதுன்னு Stop பண்ணி செக்கிங்லே இருக்காம்...

மோகன் : What...? ஷீலாவிடம் One weekலே வந்திடும்னு சொல்லிட்டேனே...!

ஜார்ஜ் : இடையிலே....ஏதாவது Adjust செய்வோம் மிஸ்டர் மோகன்...! பிசினஸை சேஞ்ச் பண்ணனும்...

Foreigners-உடன் கொண்டுள்ள தொடர்பு போதாது...அதைப்பற்றி Deep.. பா...Think பண்ண னும்...

பூபதி : வாட்...ஜார்ஜ்....says is correct....வெளிநாட்டுத் தொடர்புக்கு இந்தப் பணம் போதாது...மோகன்... ஏதாவது வேறு ரூட்டைக் கண்டு பிடிக்கனும்...

மோகன் : வேறு ரூட்...என்ன இருக்கிறது?

ஜார்ஜ் : எஸ்டேட்டின் மீது...Loan வாங்கலாமே...

பூபதி : What are you saying? அமெரிக்காவிலே ஒரு Private Firm நமக்கு ஒத்துழைப்பதாகச் சொல்லி யிருக்கிறது.

ஜார்ஜ் : Correct... ஆனுல்... Half Share நாம் போட வேண்டுமே...

பூபதி : Then......எஸ்டேட்டை விற்றுவிட வேண்டியது தான்.

மோகன் : மிஸ்டர் சேது! ஒன்றும் பேசாமல் இருக்கிறுய். What about the case?

சேது : [எழுந்து நடந்து கொண்டே] சரியா Investigation-னே செய்ய முடியல்லே... நீங்க சொல் றீங்க... அந்தப் பெண் முதுகிலே பெரிதா மச்சம் இருக்குமுன்னு...! அதை ஒன்றை வைத்துக்கொண்டு கண்டு பிடிக்க முடியலையே...ஏதாவது அந்தப் பெண் போட்டோ...இருந்தால்...

**மோகன் :** சேது ! [பலத்த குரலில்] என்ன செய்வாயோ...! ஏது செய்வாயோ? எனக்குத் தெரியாது ! எனக்கு வேண்டியது அவள் ! அவள் Signature இல்லாமல் இந்த எஸ்டேட் விற்க முடியாது... பணம் வாங்க முடியாது... பிசினசும் செய்ய முடியாது...!

**ஜார்ஜ் :** மிஸ்டர் ..மோகன்...Will...உயிலில் காட்டியுள்ள பெண்தானே வேண்டும்... எவளையோ கொண்டு வந்து நிறுத்தினால் ..

**பூபதி :** ஆமாம்...! அவளையே...இவள்தான் உயிலில் குறிப்பிட்டுள்ள பெண்ணென்று Registrar-டம் அடித்துச் சொல்வது ?

**சேது :** Yes...Yes. Very good ..idea ! Very nice idea!! கொலம்பஸ் அமெரிக்காவைக் கண்டுபிடிச்சான்... எடிசன் எலக்ட்ரிக்கை கண்டுபிடிச்சான்...நியூட்டன் ஆகஷ்ண சக்தியைக் கண்டுபிடிச்சான்.. எவனை எவனையோ...சொல்றாங்கா... இதுபோன்ற ஐடியாக்களைக் கண்டு பிடிக்கிறவங்களுக்கு ஒருபேரும் இல்லையே.....அட.....Atleast நானாவது பாராட்டு கிறேன் ..

**மோகன் :** சேது ..பைத்தியக்காரா...! உயில் எழுதியிருப்பவள்...சாதாரணமானவளல்ல...மகா புத்திசாலி... உயிலில் கூறப்பட்டுள்ள சொத்துக்குரியவளின்... அங்க மச்ச அடையாளங்களையும் எழுதியுள்ளாள்... உயில் எழுதிய மங்களாம்பிகை சாதாரணமான வளா...இடியட்...நான்சென்ஸ்...

**சேது :** ஒரு கோடி மதிப்புள்ள இந்த எஸ்டேட்டுக்குப் பல கோடி இன்னல்கள் ! எப்படி அவளைக் கண்டிபிடிக்கப் போறேனோ கடவுளே...

ஜார்ஜ் : பெரிய Problem-மா இருக்கே !

பூபதி : எப்படி சால்வ் பண்ணறது? எஸ்டேட்டை விற்ருல் ஒழிய நம்ம பிசினஸ்...இம்ப்ரு ஆகாது ..!

மோகன் : சேது...எப்படி அவளைக் கண்டுபிடிப்பாயோ...? எனக்குத் தெரியாது...அவளைக் கொண்டு வந்து நிறுத் தாமல்... [பல்லைக் கடிக்கிருன்]

சேது : ஏ...சார்...Newspaper-லே விளம்பரம் செய்து பார்த்துவிட்டால்... "பெண்ணைக் காணும்... முதுகுக்கு மேலே...வலது தோளிற்குச் சற்றுக் கீழே...முழு ரூபாய் அளவுள்ள மச்சம் கொண்ட.... சிவப்பான பெண்ணைத் தேடிக் கண்டுபிடித்துத் தரு வோர்க்கு பத்தாயிரம் ரூபாய்" – இப்படி நம்ம நாட்டிலே இருக்கிற நாளாந்திர.....வாராந்திர..... மாதாந்திர...வருடாந்தர.. நாலாந்தர பத்திரிகைகளி லும் விளம்பரம் பண்ணிவிட்டால்...

மோகன் : [மணியை அழுத்துகிருன்]

கிட்டு : ஐயா...கார்...ரெடி...

மூவரும் : [புறப்படுதல்]

[திரை]

**இடம் :**

தோட்டம்

**நேரம் :**

அந்தி நேரம்

**உறுப்பினர்கள் :**

பாலு, செல்வி, ஏகாம்பரம், லிங்கம்.

நிலைமை : [பாலுவின் நல்ல பண்பு களைப் பற்றி ஏகாம்பரம் செல்வி யிடம் பேசிக் கொண்டிருத்தல்... அப்போது லிங்கம் வருதல்]

செல்வி : [அரிசியைப் புடைப்பதும்...கற்களைப் பொறுக்கு வதுமாய் இருக்கிறாள்]

ஏகாம்பரம் : [கயிறு முறுக்கிக் கொண்டே இருத்தல்]

செல்வி : தாத்தா...அரிசியிலே கல்லு...நொய்யி...தவிடு... உமி...நிறைய இருக்கு தாத்தா...இதைப் புடைச்சுப் பார்த்தா...படி அரிசி ஆழாக்குக்கூட தேராதுபோல் இருக்கு...!

ஏகாம்பரம் : இந்தக் காலத்திலே அரிசியில் மட்டுமா அப்படி...எல்லாத்திலும் அப்படித்தானம்மா இருக்கு. அந்தக் காலத்து அரிசியிலே...ஒரு படிக்கு நாலைஞ்சு கல்லுதான் இருக்கும்....அப்படித்தான் நல்லவங்க நிறையப்பேர் அப்போ இருந்தாங்க ...ஆனால் இந்தக்

காலத்திலே நீ புடைச்சிக்கிட்டு இருக்கிற அரிசியைப் போல கெட்டவங்க அதிகம். நல்லவங்க கொஞ்சமா போயிட்டாங்க. இம்...ம் நல்லவங்களைப் பார்க்கிறது அரிதாய்ப் போச்சு...

செல்வி : அரிதாப் போச்சுன்னு சொல்லுங்க.

லிங்கம் : [தூரத்தில் வருகிறார்]

ஏகாம்பரம் : அம்மா...முதலாளி வர்றார்...உள்ளே போம்மா.

செல்வி : தாத்தா...என்ன செய்கிறீங்க...

ஏகாம்பரம் : வாங்கோ முதலாளி...வாங்க! பொழுது போகலே...கயிறு திரிக்கிறேன்.

லிங்கம் : என்ன கயிறு? அரசியல் கயிறா...!

ஏகாம்பரம் : முதலாளி...தாழ விழுதுகளை வெட்டித் தட்டிக் கயிறு திரிச்சு.. எட்டணா, ஒரு ரூபான்னு விக்கிறேன்.

லிங்கம் : Very good...தோட்ட வேலை செய்த நேரம் போக ஓய்வு நேரத்தில் கயிறு திரித்தல்.. விற்றல்...தாத்தா உங்களை ரொம்ப பாராட்டுகிறேன்... I very much appreciate you...!

ஏகாம்பரம் : முதலாளி...உழைக்காமல் சாப்பிடவோ, உட்கார்ந்திருக்கவோ...என் மனசு இடங் கொடுக்கிறதில்லீங்க.. உழைச்சே பழக்கப்பட்ட கட்டைங்க...

லிங்கம் : தாத்தா...இந்நாளில் உங்களைப் போல் உழைக்கிறவங்க மிகக் கம்மி. .. இந்த எஸ்டேட்டிலே...

இருக்கிற தொழிலாளிகளின் உழைப்போ மிகக் கம்மி...! ஆனல் அவர்கள் கேட்கிற சம்பளமோ மிக அதிகம்...Too much ..Too much !

ஏகாம்பரம் : முதலாளி...உழைக்காமலே சத்தம் போடற வங்க அதிகமா போயிட்டாங்க... எப்படி உருப் படுமோ நாடு... பாலு இருக்கிருனே...கடுமையாய் உழைக்கிருன்...அவனைப் ப்பார்க்க என் மனம் பூரிக் குதுங்க முதலாளி.

லிங்கம் : தாத்தா...நான் பாலுவைத் தோட்டக்கார ஞகவே மதிப்பதில்லை...உண்மையான நண்பஞகவே Treat பண்ணறேன்...

ஏகாம்பரம் : பாலுவைப் போல் ஊருக்கு நாலு பேரு இருந்தா போதுங்க...நாடு திருந்திவிடும்...

லிங்கம் : எங்கே செல்வியைக் காணேம்?

ஏகாம்பரம் : குடிசையிலே சமைக்குதுங்க.

லிங்கம் : சமையல் கூடத் தெரியுமா ?

ஏகாம்பரம் : [கட கட வென சிரிக்கிருர்] முதலாளி சமைக் கத் தெரியாத பெண் நம்ம நாட்டு பொண்ணு இல்லீங்க...அவங்க வேறு தேசத்திலே பிறக்க வேண்டியவங்க.

லிங்கம் : Correct ..தாத்தா...Indian culture-படி நன்ருகச் சமைக்கத் தெரிந்த பெண் நன்ருகக் குடும்பத்தையும் நடத்துவாள் என்று சொல்வார்கள்...

ஏகாம்பரம் : முதலாளி ..இந்தக் காலத்திலே...எவ்வளவு ஆஸ்பத்திரிகள் ? எத்தனை டாக்டர்கள்.. எவ்வளவு மருந்துகள் ! அவங்க அவங்க வீட்டிலே இருக்கிற பெண்கள் நல்லா சமைச்சுப் போட்டா நோய் வருங்களா...

லிங்கம் : அப்போ ஆஸ்பட்டலுக்கு போறவங்க வீட்டிலெல்லாம் சரியா சமைச்சுப் போடலீன்னு சொல்றீங்க... கரைக்ட்...தாத்தா . நானே அடிக்கடி டாக்டரிடம் போகவேண்டி இருக்குது சமையல்காரன் என்ன செய்து போட்டாலும் சாப்பிடுகிறே...

ஏகாம்பரம் : முதலாளி....கோவிச்சுக்கக் கூடாது. ..நீங்க.... இப்படி தனியா...காலத்தைக் கழிப்பது ..

லிங்கம் : தவறுதான் தாத்தா ..தவறுதான். எங்கே நல்ல பெண் கிடைக்குது...என் மனைவி இறந்த பிறகு அவள்போல் ஒருவள் கிடைக்கவில்லையே...

ஏகாம்பரம் : என்ன முதலாளி...அப்படி சொல்லீட்டீங்க ..

லிங்கம் : ஆமாம் தாத்தா...நல்ல பெண் குடிசையிலிருந்தாலும் ஏற்றுக்கொள்ள தயாராயிருக்கிறேன். ...இம் O my God .. வருகிறேன்...தாத்தா... [போய்விடுகிறார்]

[பாலு மண்வெட்டியோடு வருகிறான்.]

ஏகாம்பரம் : [கயிறை முறுக்க...கயிறு அறுந்துவிடுகிறது]

செல்வி : தாத்தா...கயிறு அறுந்துவிட்டதே...

பாலு : முறுக்கு அதிகமானல் அருமல் என்ன செய்யும் !

ஏகாம்பரம் : ஆமாம்...! கயிற்றுக்கு முறுக்கு வேண்டியது தான் ! அந்த முறுக்கே...அதிகமானல்...

பாலு : என்னங்க...தாத்தா சொல்றீங்க...

ஏகாம்பரம் : ஆமாம் தம்பி...! முறுக்கு அதிகமா போகாமலும் கயிறு அருமலும் இருக்குமுன்னு...செல்விக்கு உடனே கல்யாணத்தைப் பண்ணனும்....பருவங்கிற... கயிற்றை முதலாளிங்கிற முறுக்கு அதிகமாகி...கயிற்றையே அறுத்துவிடும் போலிருக்கு...

பாலு : தாத்தா...என்ன சொல்கிறீர்கள்...? மனிதர்க்கு மனிதர்...குரோட்டன்ஸ் செடிகளுக்கு இடையே காய்த்துக் கனிந்து குலுங்கும் நெல்லி மரத்தைப் போன்றவர் தாத்தா... அவரைப் போய்...இப்படியெல்லாம்...சொல்லாதீங்க தாத்தா...

ஏகாம்பரம் : தம்பி...நான்...ஒண்ணு தப்பா சொல்லலியே. ரோஜா செடிக்கு எப்படி முள்ளு இருக்கிறதோ... அதுபோல...பெண்ணுக்குக் கணவன் என்ற பாது காப்பான முள்ளு இருக்கவேண்டுமுணு சொல்றே...

பாலு : தாத்தா... தித்திக்கும் மாம்பழம் தருகிற மரத்திற்குப் பாதுகாப்பு என்கிற முள் ஏது தாத்தா... நல்லவர்களுக்கு பாதுகாப்பு தேவையில்லை தாத்தா...

ஏகாம்பரம : தம்பி... புழுவாய் நெளிகிற இலந்தைப் பழம் தனக்குப் பாதுகாப்பாக கொடுமையான முள்ளை வைச்சுக்கிறப்போ...நாம் மட்டும் சும்மா இருக்க முடியுமா...?...

பாலு : நமக்கு முள் தேவைதான் தாத்தா... முள்ளை வைத்து வேலி அமைக்க வேண்டியதுதான்...

ஏகாம்பரம் : ஆமாப்பா...இப்போதாவது புரிஞ்சு சொன்னாயே...

செல்வி : தாத்தா...ரெண்டு பேரும் சாப்பிட வாங்கோ... சாப்பாடு தயார்... [வட்டியை எடுத்து தட்டுகிறாள் டங்...டங்...]

பாலு : சாப்பாட்டு மணி அடித்து விட்டது. வாங்க... தாத்தா...

ஏகாம்பரம் : செல்வி...பள்ளிக்கூட ஹாஸ்டல்லே இருந்த பழக்கம் தம்பி.... தொட்டில் பழக்கம்.....எங்கே...... போகும் ?

பாலு : [சிரிக்கிறான்]

செல்வி : பார்த்தீங்களா....தாத்தா....தொட்டில் பழக்கம் என்று சொன்னீர்களல்லவா...சிரிக்கிறாரு.

ஏகாம்பரம் : ஆமம்மா...தொட்டில் பழக்கம் சுடுகாடு வரைக்கும் வரப்புடாதல்லவா...!

செல்வி : போங்கள்...தாத்தா...!

பாலு : [சிரிக்கிறான்] தாத்தா...அந்தப் பழக்கம் கொடிய பழக்கம் தாத்தா...

ஏகாம்பரம் : செல்வி... பழக்கம் என்ற சிறு கல்லை பெரிய மலையா வளர்த்திட்டா அதை அழிக்கவே முடியா தம்மா. பழக்கத்திற்கு மனிசன் அடிமையாகக் கூடாது...! மனுசன் கடவுளுக்கு அடிமையாகலாம்.

செல்வி : இம்......எங்கே......இன்னும் தாத்தா கடவுளை அழைக்கவில்லை என்று நினைச்சேன்.

மூவரும் : [உள்ளே போகிறார்கள்]

[ திரை ]

மனிதன் ஒய்வுறும் போதும்
சந்தனம் தேய்வுறும் போதும்
பனிநீர் மேயுறும் போதும்
அரும்பு கட்டறும் போதும்
காய்கள் பழமுறும் போதும்
கனிகள் காம்பறும் போதும்
இனியென என்போம்!

— காவிரிநாடன்.

**இடம் :**

மோகன் பங்களா

**நேரம் :**

இரவு 7 மணி

**உறுப்பினர்கள் :**

சேது, வேதா, ஜான்.

நிலைமை : [சேது ஜானிடம் பெண்ணைப் பற்றித் துப்பு துலக்குகிறான்... ஜான் பெண்ணைப் பற்றிய செய்தியைக் கூற மறுக்கிறான்... வேதா தந்திரம் செய்கிறாள் அவனிடம்]

வேதா : [கையில் துடைப்பத்தால் வீட்டைப் பெருக்கிக் கொண்டிருக்கிறாள்]

ஜான் : வேதா...வேதா... எப்போ பார்த்தாலும் துடைப்பமும் கையுமா இருக்கிறே.....கொஞ்ச நேரந்தான் ஜாலியா இருக்கக் கூடாதா ?

வேதா : ஏய்யா...? வேலைக்காரிக்குள்ள ஆயுதம் துடைப்பக் கட்டை தானே... [அவனைத் தள்ளிக் கொண்டே] நகரய்யா...நகரு...ஒரே குப்பை...பங்களாவே இவ்வளவு குப்பையா...

ஜான் : பாக்கிறதுக்கும்.....பெருமையா பேசறதுக்கும் தானே பங்களா? பங்களாக்குள்ளே இருக்கிற குப்பை என்கிற ஊழல் கொஞ்சமா?...

வேதா : ஏய்யா...நம்ம பங்களாவிலே என்ன ஊழல் இருக்குது...? அதைக் கொஞ்சம் எனக்குத்தான் சொல்லய்யா...என் செல்லய்யா...? [கொஞ்சுதல் போல் பாவனை]

ஜான் : வேதா... அந்த ஊழலைச் சொல்லனும்னு...அட்வான்சா கன்னத்தில் ஒன்னு கொடுத்திடு...

வேதா : ஏய்யா....மனுசன்....எதெதுக்கோ லஞ்சம் கேட்கிறான்.... நீ...இதுக்குக் கேட்க ஆரம்பிச்சிட்டே.... அட்வான்சா. இந்தா வாங்கிக்கோ. [முகத்தை அருகில் கொண்டு செல்லல் – பளார் என்று அறைகிறாள்]

ஜான் : வேதா... நான் கேட்ட பரிசு...இதுதானா?... நீ மட்டும் பொம்பளையா இல்லேன்னா...உன்னை என்ன செய்வேன்.....தெரியுமா? [கன்னத்தைத் தடவிக் கொடுத்துக் கொண்டே கிட்டே போதல்]

வேதா : என்னய்யா...செய்வே...என்ன...செய்வே...[சத்தம் போடுதல்]

ஜான் : வேதா...வேதா...சத்தம் போடாதே... இந்த உடலும் உயிரும் ஒட்டியிருப்பது உனக்காக...எல்லாம் உனக்காக...

**சேது :** [வந்து கொண்டே] காதல் காட்சி இப்பொழுது தான் ஆரம்பமா.... I am sorry.... ஜான் போய் விட்டு அப்புறம் வர்றேன். Carry on...! [போவது போல் திரும்புதல்]

**வேதா :** சேத்தய்யா.. ...போகாதீங்க......காதல் காட்சியும் இல்லே...கத்தரிக்காயும் இல்லே...

**சேது :** மோதல் காட்சியா.....? நேரம் சரியில்லே...Then proceed... நான்...வர்றேன்.

**ஜான் :** வர்றேன்...வர்றேன்னு சொல்றீங்களே தவிர போகலியே...

**சேது :** ஜான்...இதோ...போகப் போகிறேன்...போறேன்...

**வேதா :** [சேது முன்னால் நின்று தடுத்து] நீங்க போகக் கூடாது... ஜான் சொன்னால் நீங்க கேட்கணுமா... கிழட்டுப் பய...நீங்க...சும்மா இருங்க...

**ஜான் :** ஏய் வேதா...என்னையா கிழடுன்னு சொன்னே... என்னைப் பார்த்துச் சொல்.

**வேதா :** உன் மூஞ்சிக்கு......முகரைக் கட்டைக்கு...... கிழடுன்னு சொல்லாமே...வேறு என்னய்யா சொல்லனும்...உயர உயரப் பறந்தாலும் ஊர்க்குருவி... ஊர்க்குருவி தானய்யா...

**சேது :** வேதா...கொஞ்சம்...பேசாமலிரு...ஐயோ பாவம்! ஜான்.....இந்த வேதா..... இப்படித்தான் பேசும்..... அதெல்லாம் மனசிலே வைச்சுக்காதே...

**ஜான் :** இ...இ...அதெல்லாம் மனசிலே வெச்சுக்கிட்டா... மனசு தாங்குங்களா....? சேத்தய்யா....புத்தியுள்ள

பெண் தன் வீட்டைக் கட்டுகிருள் என்று வேதத்திலே சொல்லுது......வேதா......புத்தியுள்ள பெண்ணுச்சே...இல்லே...வேதா...

வேதா : செய்யறதெல்லாம் அயோக்கியத்தனம்...... வேதத்தை வேறு உதாரணத்துக்கு எடுத்துக்கணு மா ?

சேது : ஏய்...வேதா... [கண்ணடித்து[ புடு...புடு...மோட்டாரு போலே கிடுகிடுன்னு பேசிக்கிட்டே இருக்கிறே...கொஞ்ச நேரந்தான் சும்மா...இரு...

ஜான் : சிடுசிடுன்னு பேசிட்டாலும்.....வேதா.....மனசு..... தங்கம்...தங்கம் !

வேதா : ஆமாம்.....தங்கம்.....வந்து அள்ளிக் கொண்டு போய்யா...!

சேது : ஜான்...கொஞ்சம்...இங்கே...வா...இப்படி உட்கார்...!

ஜான் : [சேது அருகில் போய் உட்கார்கிருன்]

சேது : வேதா...நீயும்...வா...இப்படி உட்கார்.

வேதா : [இப்படியும் அப்படியும் குலுக்கிக் கொண்டு போய் அமர்கிருள்]

சேது : ஜான்...இந்த எஸ்டேட்டிலே ரொம்ப காலமாக இருக்கிறே...அதனுலே உனக்கு வேதாவைக் கல்யாணம் பண்ணி வைக்கச் சொல்லி மோகனிடம் சிபார்சு செய்கிறேன். ஆனுல்...ஒரு...கண்டிஷன்.

ஜான் : ஐயோ...கண்டிஜன்...கண்டிஜன்னு தள்ளிப்போடாதீங்க. எனக்கு வயசாகிக்கிட்டே இருக்கு ..

வேதா : இதுக்குத்தான் உட்காரச் சொன்னீங்களா...

சேது : ஜான் ..இந்த எஸ்டேட்டுக்கு உரிய வாரிசு உனக்குத் தெரியும்...அந்த வாரிசு எங்கே இருக்கிறது ? எப்படிக் கண்டுபிடிப்பது ? அதெல்லாம் கொஞ்சம் சொல்லிப் புடு... இப்போதே உங்க எஜமான் கிட்டே சொல்லி கல்யாணத்தை ஜாம்...ஜாம்னு முடிச்சுப்புடறேன்...

ஜான் : சேத்தய்யா...தயவு செய்து அதை மட்டும் கேட் காதீங்க. அந்த வாரிசு ..எங்கோ நிம்மதியா இருக் கும் ..இங்கே வந்து ...சித்ரவதைப்பட்டுச் சாவதை விட...எங்கேயாகிலும் கூழைக் குடிச்சுக்கிட்டு சௌக் கியமா இருக்கட்டும்...

சேது : ஜான்.....இன்னும் புரியாமல் பேசுகிறாய்.....அந்த வாரிசு வந்துட்டா...அதுதானே எஸ்டேட்டுக்கு உரிமையாளராகப் போகிறது.

வேதா : சொல்லய்யா......ஜான்......அதைத்தான் சொல் லிடய்யா...

ஜான் : ஆட்டைக் கொண்டு வந்து புலியிடம் விடச் சொல்றே... அப்படித்தானே...

சேது : அதைப்பற்றி நீ கவலைப்படாதே... நான் பார்த்துக் கொள்கிறேன்.

ஜான் : சேத்தய்யா .. அந்த வாரிசை நானே கொண்டு வந்து ஒப்படைக்கிறேன்.

வேதா : எப்பய்யா கொண்டு வந்து ஒப்படைக்கிறே...

சேது : ஜான்...நீ ..மனிதனே இல்லய்யா...

வேதா : தெய்வம்...தெய்வம்...

ஜான் : வேதா...இன்னொரு முறை சொல்லே...என் மனசு குளிருதே...குளிருதே...

வேதா : கம்பளி கொண்டாந்து போர்த்தட்டுமா...

சேது : ஜான்...ஒரு விஷயத்தை மறந்திடக் கூடாது..... அந்த வாரிசை யாருக்கும் தெரியாம என்னிடம் கொண்டுவந்து ஒப்படைத்துவிடு... பிறகு ஆக வேண்டியதை...நடக்கவேண்டியதை...

ஜான் : செய்ய வேண்டியதை....நடத்த வேண்டியதை.... எல்லாம் நடத்திவிட்டுத்தான். .கொண்டு வருவேன்...

சேது : ஜான்...எதை முன்னல் செய்யனும்...எதைப் பின் ஞல் செய்யனும்னு தெரியாது உனக்கு.....எல்லா வற்றையும் நான் பார்த்துக்கிறே...பொறுப்பை என் னிடம் கொடு...

வேதா : ஏய்யா...ஜான்...உன்ஞலே என்னய்யா...முடியும்... இவரு சொல்றபடி செய்யய்யா...

ஜான் : வேதா...என்னே என்னமோ சாதாரணமா நினேச் சுட்டே....நாளேக்குப் பாரு ..என்ன செய்றேன்னு...

சேது : ஜான்! உன்னேச் சாதாரணமாக நினேக்கவில்லே யப்பா... வரட்டுமா... [போகுதல்]

வேதா : நானும் வர்றேங்களே... [போதல்]

ஜான் : நானும் வர்றேங்கறேன்... [போதல்]

[ திரை ]

**இடம் :**

மோகன் பங்களா

**நேரம் :**

இரவு 12 மணி

**உறுப்பினர்கள் :**

மோகன், பூபதி, ஜார்ஜ், ஜான்.

நிலைமை : [மூவரும் சீட்டாடுகின்றனர்... மதுபானம் அருந்துகின்றனர்... ஜார்ஜ், பூபதி இருவரும் வெளியேறுகின்றனர்... மாற்று உடையில் ஜான் ரிவால்வாருடன் வருகிறான். மோகனைச் சுடுதல்... ஜானை மோகன் சுடல்... காயங்களோடு ஜான் தப்பி விடுதல்]

மோகன் : பூபதி....மது....மாது ! மது....மாது ! ஆஹா... எத்தனை கோடி இன்பம் ? எத்தனை கோடி இன்பம் ? [சீட்டைப் போட்டுவிட்டு, மதுவை எடுத்துக் குடிக்கிறான்]

பூபதி : மது is my life... மாது is my soul.. ஆஹா... என்ன சொர்க்கமடா ! ஓ... God please come on... நீயே கொஞ்சம் குடித்துப் பார்...!

ஜார்ஜ் : குடிப்போம்...! குடிப்போம்...! குடித்துக் கொண்டே இருப்போம் ! Drink while you drink... And play while you play...! ஹா... ஹா

மோகன் : ஜார்ஜ் ! How many enjoyment இந்த உலகத்திலே...How many enjoyment இந்த லோகத்திலே...

பூபதி : I love you ! I love you !!... [ஆடுதல்]

ஜார்ஜ் : Kiss me... Kiss me... Hallo kiss me...

மோகன் : ஒரு கோப்பையிலே என் குடியிருப்பு ! ஒரு கோலமயில் என் துணையிருப்பு !! அந்தக் கவிஞன் சும்மா பாடிலியப்பா... ..அனுபவிச்சுப் பாடியிருக்கிருரப்பா...

பூபதி : மது கிடைக்கிற பூமி ! மாது தருகிற இன்பம் !! மயக்கம் ! மயக்கம் !!... அடடா... சொர்க்கம் சொர்க்கம் !

ஜார்ஜ் : ஓ...பிராந்தி... ஓ ..விஸ்கி... ! நீங்கள் வாழ்க ! வாழ்க !

[கடிகாரத்தில் மணி டாண் டாண் என்று பனிரெண்டு அடித்தல்]

மோகன் : ஓ...Now the time is twelve O'clock ! [வாட்சைப் பார்த்தல்]

பூபதி : ஓ... Time is 12 O'clock... Night 12 O'clock.

ஜார்ஜ் : ஓ...காலம்...பனிரெண்டு மணி! இரவு பனிரெண்டு!! ஆல்ரைட் ! பூபதி... We may go.

பூபதி : மிஸ்டர் மோகன்... டாட்...டா...டா...ட்டா...

ஜார்ஜ் : குட்...நைட்...! குட்...நைட்..,!
[இருவரும் தள்ளாடிக் கொண்டே போகிறுர்கள் ]

மோகன் : [டிம்... லைட்டைப் போட்டுவிட்டு...டேபிள் மீது காலைப் போட்டுக் கொண்டு...புகை பிடித்தபடி இருக் கிறான்]

ஜான் : [முகத்தில் கருப்புத் துணியை அணிந்து கொண்டு மெல்ல வருகிறான்... வரும்போது நாற்காலியைத் தள்ளுதல்]

மோகன் : [நிமிர்ந்து உட்கார்ந்து கொண்டு] யாரது...? [சுற்றிலும் பார்க்கிறான்]

ஜான் : [கீழே குனிந்து உட்கார்ந்து கொள்கிறான்]

மோகன் : [மீண்டும் சாய்ந்து படுத்துக் கொள்கிறான்]

ஜான் : [மெல்ல எழுந்து நடக்கிறான்.. கண்ணாடி டம்ளரைத் தட்டி விடுகிறான்]

மோகன் : [எழுந்து கொண்டே] வாட்... What...Nuisance [எழுந்து சுற்றிப் பார்க்கிறான்]

ஜான் : [மேசைக்கடியில் உட்கார்ந்து கொள்கிறான்]

மோகன் : டேய் ஜான்... ஜான்... [கத்துகிறான்] [மீண்டும் நாற்காலியில் போய் உட்கார்கிறான் அரைப் போதையுடன்]

ஜான் : [மெல்ல எழுந்து நிற்கும்போது சத்தம் எழும்பு கிறது]

மோகன் : [டிராயரைத் திறந்து ரிவால்வரை எடுக்கும் போது]

ஜான் : [எழுந்து சுடுகிறான்]

மோகன்: [குனிந்து கொள்கிறான் – ரிவால்வரை எடுத்துக் கொண்டு திருப்பிச் சுடுகிறான்]

ஜான்: [மீண்டும் சுடுகிறான்]

மோகன்: [குனிந்து கொண்டு – பதிலுக்குச் சுடுகிறான்]

ஜான்: [ஜான் மீது குண்டு பாய்ந்து விடுகிறது... ஆ! என்ற சத்தத்தோடு தடுமாறித் தடுமாறி ஓடுகிறான்]

மோகன் : ஹஹ்ஹா...ஹஹ்ஹா... [என்று சிரிக்கிறான்]

[ திரை ]

**இடம் :**

அடர்ந்த செடிகளுக்கு இடையில்

**நேரம் :**

விடியற்காலை 6 மணி

**உறுப்பினர்கள் :**

ஜான், சேது, வேதா.

நிலைமை : [ஜான் உடல் முழுவதும் இரத்தம் வடிந்து கொண்டிருக்கிறது... துணிகளைக் கிழித்துத் தானே கட்டுப் போட்டுக் கொண்டிருக்க... சேதுவும்... வேதாவும் வருதல்... நடந்த விவரங்களைக் கூறிவிட்டு...தான் எழுதி வைத்திருந்த கடிதத்தையும் தந்துவிட்டு... ஜான் உயிர் விடுகிறான்]

**ஜான் :** உடல் முழுவதும் இரத்தம் வடிகிறது... துணிகளைக் கிழித்துக் கட்டிக் கொண்டே] ம்...ம்... அப்பா... அம்மா...! [வரும் துயரத்தை அடக்குதல்]

[சேதுவும் வேதாவும் வருதல்]

**சேது :** ஆ...! ஜான்...! என்ன ஒரே ரத்தம்...ரத்தம்.

**வேதா :** ஐயோ...இதென்ன கொடுமை...ஜான்... "நாளைக்குப் பாரு என்ன செய்யப் பேறேன்னு" சொன்னீயே... என்னய்யா இப்படிப் பண்ணிக்கிட்டே!

ஜான் : மெதுவாகப் பேசு...வேதா ! நான் நினைச்சது ஒன்னு நடந்தது ஒன்னு...போயுட்டுது...! பாவி...! அயோக்கியனை ஒழித்துவிட்டு எஸ்டேட்டுக்குரியவங்களைக் கொண்டு வரலாம்...உங்களுக்கும் சொல்லலாம் என்று இருந்தேன்...ஆனா...கர்த்தர்...முடிவை வேறு விதமா மாற்றி விட்டார்...

சேது : ஜான்... விஷயத்தை விவரமா...சொல்லு... நான் தெரிஞ்சுக்கிறேன்...ஜான் உனக்கா... இப்படி... கதி வரவேண்டும்.

ஜான் : சேத்தய்யா... நான் மோகனைச் சுட்டேன்...ஆனால் அதுக்குள்ளே . அவன் குண்டு என்னைப் பதம் பார்த்து விட்டது...இம்...கர்த்தரே...என்னை மன்னியுங்கள் !

வேதா : ஜான்... கடைசியா... அந்த அந்தரங்கத்தைச் சொல்லிப்புடய்யா...

சேது : ஜான்... உன் திட்டத்தை என்னிடம் சொல்லியிருந்தா ஐடியா கொடுத்திருப்பேன்... ம்...ஜான்... உன் தலை எழுத்து...

வேதா : எசமான் கிட்டே.... எவ்வளவு கஷ்டப்பட்டே... எத்தனை அடிபட்டே...அதெல்லாம் இதுக்குத்தானா ! ஐயோ... ஜான்...!

ஜான் : என்னைப்பத்தி கவலைப்படாதே...வேதா...வேதா... நான் ஒரு லட்சியத்திற்காகவே இந்த பங்களாவிலே இருந்தேன்...இப்போ அதை நிறைவேத்த முடியாமல் போறேன். [அழுகிறான்]

சேது : ஜான் .. அந்த லட்சியத்தை நான் நிறைவேற்றி வைக்கிறேனப்பா... இது சத்தியம்... சத்தியம்...

ஜான் : [சேதுவின் கைகளை இறுகப் பிடித்து கண்களில் ஒற்றிக்கொண்டு] சேத்தய்யா...என் இலட்சியத்தை நீங்கள் நிறைவேற்றவில்லையென்றால் என் ஆத்மா... சாந்தியடையாது...!

[ஜான் தன் சட்டைப் பைக்குள் வைத்திருந்த கடிதத்தை எடுத்துக் கொடுக்கிறான்]

சேது : ஜான்...இதில் என்ன...எழுதியிருக்கிறது ?

ஜான் : சேத்தய்யா... நீங்கள் கேட்ட... சந்தேகங்கள்... அந்தரங்கங்கள் எல்லாம் இந்தக் கடிதத்தில் இருக்கிறது...

வேதா : பத்திரமா வைச்சிருங்க......பத்திரம்...... ஜானை ஆஸ்பத்திரிக்கு எடுத்துக்கிட்டுப் போங்க...

ஜான் : வேதா... உன் அனுதாபமே எனக்குப் போதும்... வேதா... அடுத்த பிறவியிலாவது நான் உன்னைக் கல்யாணம் பண்ணிக்கனும்...ஆ...அப்பா...! அம்மா... சேத்தய்யா...சேத்தய்யா...

[ உயிர் பிரிகிறது ]

[ திரை ]

எலும்பைக் கடிக்கும் நாய்க்கும்
எச்சிலை விழுங்கும் காக்கைக்கும்
எதையும் தின்னும் பன்றிக்கும்
எப்போதும் மதிப்புத் தரலாம்!
எனினும் ஏய்ப்பவனுக்கு மட்டும்
அவன் இறந்த பின்னரும் கூட
எந்த மதிப்பும் தரலாகாது!

— காவிரிநாடன்.

**இடம் :**

மோகனின் தனி அறை

**நேரம் :**

நடுப்பகல்

**உறுப்பினர்கள் :**

வேதா, சேது, மோகன்,

ஜார்ஜ், பூபதி, கிட்டு.

நிலைமை : [மோகன் ஜானைப் பற்றி யும்–நடந்த துப்பாக்கிச் சூட்டை யும் விவரித்தல் – சேதுவும் வேதா வும் – ஜான் கொடுத்த கடிதத்தில் கூறப்பட்டுள்ள இடம் தேடிப் போதல்]

மோகன் : [புகையும் சிகரெட்டுடன் உட்கார்ந்திருத்தல்]

சேது : குட்மார்னிங் சார்...

மோகன் : குட்மார்னிங் சேது...! உனக்கு நியூஸ் தெரியுமா?

சேது : What news ! எனக்கு ஒன்றும் தெரியாதே !

மோகன் : Yesterday night ஒரு திருடன் பங்களாவிற்குள் வந்தான்...என்னை Fire செய்திட்டு கொள்ளையடிச்சுக் கிட்டுப் போக Try பண்ணியிருக்கிறான். நானா... விடுவேன்...

சேது : நீங்களா...விடுவீர்கள்...அவன் ஓடியல்லவா போயி ருக்கனும்...

மோகன் : சேது...நான் சுட்டதும்... அவன் உடலில் குண்டு பாய்ந்திருக்கிறது... ரத்தம் சொட்டச் சொட்ட... ஓடியிருக்கிறுன்...ராஸ்கல்.

சேது : அப்போ... அவன்... ஓடிப்போயிட்டான்னு சொல் லுங்கோ !

மோகன் : இடம் தெரியாமல் வந்திருக்கிறுன்...Bloody.

சேது : சார்...என்னமோ...சதி நடந்திருக்கு...சார்...

மோகன் : நோ...நோ...நத்திங்...சதி... I have no enemy சேது...!

[பூபதியும் ஜார்ஜும் வருகிறுர்கள்]

பூபதி : குட்மார்னிங் மோகன்...!

மோகன் : குட்மார்னிங் பூபதி...!

ஜார்ஜ் : குட்மார்னிங் மோகன்...

மோகன் : குட்மார்னிங் ஜார்ஜ்... Come on take your seat...

இட்டு: எசமான்...காரு ரெடிங்கின்னே...

மோகன் : All right... மிஸ்டர்...சேது... டைம் Pass ஆயிக் கிட்டே இருக்கே...அந்த மேட்டரை Seriousஆ எடுத் துக்கிட்டு முடிக்கல்லே...

சேது : I am sorry Sir...Case சாதாரண கேஸா...கொஞ்சம் Time பிடிக்குது... பார்த்துக் கொள்வோம்... இந்த சேது முயற்சித்தது.....நடக்காமல் போயிடலே..... கொஞ்சம் அவகாசம் கொடுங்கோ...

பூபதி : மிஸ்டர்... அவகாசம்...அவகாசம் ! வெளிநாட்டு வியாபாரத் தொடர்பு Finance இல்லாமல் முடங்கிப் போச்சே...

ஜார்ஜ் : ஆமாம்...மிஸ்டர்...எவ்வளவு சீக்கிரம் முடியுமோ அவ்வளவு சீக்கிரம் விஷயத்தை முடிக்கனும்...

மோகன் : மிஸ்டர்...சேது... அதைக் கண்டு பிடிச்சு விஷயத்தை முடிச்சுட்டா......பத்தாயிரம்......என்ன அரை லட்சம் Fifty thousand... தர்றேன்னு சொல்லி யிருக்கேன்...அப்புறம்...

சேது : பணம்...கிடக்கட்டும் சார்... உங்களுக்கு அந்தக் காரியத்தை செய்து கொடுப்பது...என் கடமை...

கிட்டு : எசமான்...கார்...ரெடி...

மோகன்
பூபதி
ஜார்ஜ் } : மூவரும் வெளியேறுகின்றனர்.

சேது : வேதா...வேதா...

வேதா : [துடைப்பத்துடன் வருதல்]

சேது : எப்போப் பாரு...கையிலே...ஒரு ஆயுதம்...!

வேதா : ஏ...ஆயுதம் வெச்சிருக்கிறது...தப்பா...!

**சேது :** ஐயோ... தப்புன்னு சொல்ல முடியுமா? பாரு வேதா...! நம்ம மகாவிஷ்ணு...கையிலே சக்கரம், சங்கு வைத்திருக்கிறார். ஈஸ்வரன்...சூலாயுதம், ஓடு வைச்சிருக்கிறார்... முருகன்...வேலாயுதம்... இப்படி நம்ம கடவுளுங்களே...ஆயுதங்களை வைத்திருக்கிறார்கள்... நீ வைச்சிருக்கிறது...தப்பா...

**வேதா :** ஆ...ஹா... என்ன துப்பு கண்டு பிடிக்கிறீங்க...! யாரும் கண்டு பிடிக்காததை...நீங்க கண்டு பிடிச்சிட்டுங்களே...!

**சேது :** வேதா...இது மட்டுமில்லே... ஜான் கொடுத்திட்டுப் போனானே... ஒரு லட்டர்... அந்த லட்டரில் எழுதியிருப்பதுபோல்...அந்தப் பெண்...அனாதை விடுதியில் படிச்சிக்கிட்டு இருக்க வேண்டும்... அங்கே போய்ப் பார்த்து புலன் விசாரணை...செய்ய வேண்டும்...

**வேதா :** புலன் விசாரணை...! ஐயோ... அந்த வார்த்தையைச் சொல்லாதீங்க...புலன் விசாரணை...புலன் விசாரணை என்று சொல்லி...நாளு...வாரமாகி...வாரம்... மாசமாகி...மாசம்...வருசமாகி...வருசம் யுகமாயிடும்.

**சேது :** அந்த Orphanage - க்குப் போய்ப் பார்த்திட்டு வந்திடு...றேன் வரட்டுமா...

**வேதா :** வாங்க...

[ திரை ]

**இடம்:**

குடிசையின் உட்பகுதி

**நேரம்:**

அந்தி நேரம்

**உறுப்பினர்கள்:**

செல்வி, பாலு, லிங்கம்.

நிலைமை : [செல்வியும் பாலுவும் தம்மை மறந்து விளையாடிக் கொண்டிருக்கின்றனர்... அதை லிங்கம் மறைவிலிருந்து பார்க்கின்றார்]

பாலு : செல்வி...தண்ணீர்...(ஸ்டூல்மீது உட்கார்ந்தபடி)

செல்வி : [தண்ணீர் கொண்டு வந்து தருகிறாள்]

பாலு : [கைகளைப் பிடித்துக்கொண்டே] செல்வி...செல்வி...

செல்வி : யாராவது பார்க்கப் போகிறாங்க... கையை விடுங்க... [பாலுவிடம் நெருங்கிக் கொள்கிறாள்]

பாலு : யார் பார்த்தால் என்ன?... பார்க்காவிட்டால் என்ன? உன் கொடி போன்ற கரங்கள் என்மேல் படர...வேண்டியதுதான்...செல்வி... [இறுகக் கட்டிக் கொள்கிறான்]

செல்வி : அத்தான்...

பாலு : செல்வி... உலகம் எவ்வளவு இனிமையானதுன்னு இப்பத்தான் தெரியுது...கண்ணு...

செல்வி : இம்...ம்...

பாலு : கண்ணே... இந்த உலகத்தில் உன்னைப் போன்ற பத்தினிப் பெண்கள் இருக்கும் வரை உலகம்... சொர்க்கம்...சொர்க்கந்தான்...

செல்வி : சொர்க்கம்...இங்கே...இல்லை...அத்தான்...

பாலு : செல்வி... மனிதன் மண்ணில்தான் பிறக்கிறான்... மண்ணில்தான் இறக்கிறான்... எனவே அவன் சொர்க் கத்திற்கும் போவதில்லை...நரகத்திற்கும் செல்வ தில்லை... சொர்க்கமும்...நரகமும்... பூமியேதான்... செல்வி...

செல்வி : விட்டுடுங்க... அத்தான்... எனக்கு ஒரே பயமா... இருக்கு...

பாலு : விட்டு விடுகிற தொடர்பா...கண்ணு ! எத்தனை ஜென்மத்திற்கும் விடாத...தொடர்பாச்சே...காதல் பூமிதானே...மனித பூமி...

செல்வி : இம்... ம்...

பாலு : தோட்டத்திலே...எத்தனையோ செடிகள் இருக்கு... கண்ணு ! ஆனால்... தொட்டா சிணுங்கியைப் போல மெல்லிய உணர்வு படைத்த செடி இருக்குதா ? தொட்டா சிணுங்கியைப் போல பெண்கள் நாண மென்கிற மெல்லிய உணர்விலேதான் அவங்க அழகே நிறைந்திருக்கு...

செல்வி : இம்...ம்...ம்... விடுங்கள் அத்தான்... (வேடிக்கை யாக) ஐயோ......தாத்தா......வர்றார்......தாத்தா வர்றார்...

பாலு : [விட்டு விட்டுத் திரும்பிப் பார்க்கிறான் – தாத்தா வராததைக் கண்டு] என்னை மயக்கத்தான் தெரியும் என்றிருந்தேன்... ஏமாற்றக்கூடத் தெரிகிறதே... கள்ளி...! (கைகளைப் பிடிக்கிறான்)

செல்வி : எனக்கு அதெல்லாம் ஒன்றும் தெரியாது...... உங்களைப் பார்த்துக் கொண்டே இருக்கத்தான் தெரியும்...!

பாலு : உண்மையாகவா... செல்வி...

செல்வி : ஆமாங்க அத்தான்... நீங்க கோயிலிலே இருக்கிற தெய்வம்... அந்தத் தெய்வத்தை...பக்தியோடு... பயத்தோடு...பரிவோடு...பாசத்தோடு... பார்த்து ரசித்து வணங்கிக்கிட்டு இருக்கிற பக்தை...... நான்......

பாலு : இல்லை.. கண்ணு... நீதான் கோயிலிலே இருக்கிற தெய்வம்... நான்தான் அந்தத் தெய்வ தரிசனத்திற்காக.. நாள்தோறும்...இதயம் என்ற மலரெடுத்து... காதல் என்கிற பாசுரத்தால் பாடிப் பரவசப்படும் பக்தன்.

செல்வி : இல்லை...அத்தான்...பெண்களுக்கு... தன் மனசுக்கு நிறைஞ்சவன்தான்.....கடவுள் ! அவனைத்தான்...... அவள்...கடவுளுக்கு மேலாக மதிக்கனும்...

பாலு : ஆமாம்...கண்ணு... தனக்குடையவனை மதிக்கிற பெண்...கடவுளை மதிக்கிறவள்...தன் கணவனையே மதிக்காதவள்...கடவுளையே மதிக்காதவள்...

செல்வி : அத்தான்...! என் வாழ்க்கையின் வளமும் வனப்பும் உங்கள் கையில்தான்...இருக்கு... எப்படி...எப்படியோ வளர்ந்த...செடிகளையும்...கொடிகளையும்... வளைத்தும்...ஒடித்தும்...கண்ணுக்கு அழகா...வளர்க்கிறீங்க...

பாலு : அதுபோல...உன்னையும் கண்கவர்.. சோலையாக மாத்தனும்னு... சொல்றே...

செல்வி : ஆமாங்க... அத்தான் [மார்பில் புதைந்து கொள்கிறாள்]

பாலு : கண்ணே...! வாழ்க்கையைச் சோலையாக்குவது சாதாரண விஷயம்...! ஆனால்......கண்ணு ..... வாழ்க்கையைச் சோலையாக்கிய பிறகு...அதை...பாலைவனமா...மாத்தாம....பார்த்திக்கிறது...உன் கையில் தான்... இருக்கு...

செல்வி : அத்தான்...! உங்களை அப்படியே...என் விழிகளுக்குள் எடுத்து வைத்துக் கொள்ளலாம்னு இருக்கு...

பாலு : ஐயய்யோ... அப்படியெல்லாம்...செய்திடாதே... உன்... விழி...தாங்காது... சிறிய தூசியையே தாங்கிக் கொள்ள முடியாத விழிகள்...

செல்வி : காதல்...பெரிய மரத்தையே கூட தாங்கிக் கொள்ளும்...அத்தான்...

லிங்கம் : *[ வந்து கொண்டே ]* குடிசையே.....தீப்பிடிக்க ஆரம்பமாகிவிட்டது... I am; sorry பாலு... பாலு! என்னை...உடனே...வந்து பாரு... *[அலட்சியமாகப் போகிறார்]*

செல்வி : அத்தான்...! *[பயத்தினால் கட்டிப் பிடித்துக்கொள் கிறாள்]*

பாலு : கண்ணே...! *[கட்டிக் கொள்கிறான்]*

[ திரை ]

மனிதன் மறக்கக் கூடியவன்
அதனால் ஆசைகள் பிறக்கின்றன!
மனிதன் இறக்கக் கூடியவன்
அதனால் நல்லவை உலவுகின்றன!
மனிதன் சிந்திக்கத் தெரிந்தவன்
அதனால் துயர்கள் நிகழ்கின்றன!

— காவிரிநாடன்.

**இடம் :**

எஸ். வி. லிங்கம் பங்களா

**நேரம் :**

இரவு 7 மணி

**உறுப்பினர்கள் :**

லிங்கம், பாலு, ஏகாம்பரம்.

நிலைமை : [கைகளைக் கட்டியவாறு முன்னும் பின்னும் வேகமாக நடந்தபடி இருக்கிறார் லிங்கம். பாலு பயத்தோடு வந்து நிற்கிறான்]

பாலு : முதலாளி...முதலாளி... என்னையும் அறியாமல் அவளையும் அறியாமல்...ஏதோ ஒன்னு...எங்கள் உள்ளத்திலே வளர்ந்துட்டுதுங்க...

லிங்கம் : பாலு...! என் நம்பிக்கையையே தகர்த்துவிட்டாயப்பா......பாலு! ஒருத்தர்......ஒரு பொருளைக் கொண்டு வந்து ஒப்படைச்சா...அதைத் திருப்பிக் கொடுக்கிற வரைக்கும்...கண்ணும் கருத்துமா... பார்த்துக்கணும் பாலு...பார்த்துக்கணும்...

பாலு : முதலாளி...கண்ணும் கருத்துமாகத்தான் என் இரு கண்களைப் போல் பார்த்துக்கிறேன் முதலாளி...

லிங்கம் : பாலு...ஒருத்தர்...ஒரு பொருளைக் கொண்டுவந்து ஒப்படைச்சா நம்ம பொருளா ஆக்கிக்கக்கூடாது... பாலு ..ஆக்கிக்க கூடாது... That is wrong...

பாலு : அப்படியெல்லாம்...இல்லிங்களே ..

லிங்கம் : பாலு... எந்தெந்தச் செடிகளை எங்கே வெச்சா... நல்லா இருக்கும்னு ..உனக்குத் தெரியும்... எந்தெந்தக் கொடிகளை எங்கே படரவிட்டால் அழகா இருக்கும்னு உனக்குத் தெரியும் ..

பாலு : தெரியுங்க...முதலாளி... முட் செடிகளை தோட்டத்துக்கு வேலியா வைக்கணும்... நல்ல பெரிய மரங்களா வளரப் போறதை...வேலிக்கு ஓரத்திலே நடவேண்டும்... குரோட்டன்களை...வரிசை வரிசையாக தோட்டத்து மத்தியிலே வளர்க்கணும்...

லிங்கம் : இம்...இம்... கும் என்று மலர்ந்து கம்மென்று மணக்கின்ற முல்லைக் கொடியை... பங்களா... முகப்பிலே .. படரவிட வேண்டும்...

பாலு : ஆமாங்க... முதலாளி... அப்போதுதான்...பங்களா வாசல்... கலை அழகுடன் விளங்கும்.

லிங்கம் : பாலு......எல்லாம்......உனக்குத் தெரியுது ..... தெரிந்தே ..தப்பு செய்யலாமா...? Very bad...Very bad... பாலு...ஆண்டவன்...உலகத்திலே படைச்சிருக்கிற பொருளை எல்லாம்...சும்மா படைக்கிலே... எது. ..எது....எங்கே இருக்குணுமோ....அது....அது... அங்கே இருந்தாத்தான் மதிப்பு...! அழகு! பொருத்தம்! பாலு! பாரு... அந்தப் பெண்... செல்வி...இருக்காளே...அவள்...

பாலு : முதலாளி... மிகவும் நல்ல பெண்ணுங்க... அறிவுள்ள பெண்ணுங்க......அடக்கமான பெண்ணுங்க...... எனக்கு...

லிங்கம் : பாலு! வைரத்தை... பணக்காரன் போட்டால் தான் மதிப்பு... அதற்குரிய அந்தஸ்தே...தனி... பாலு! வைரத்தை ஏழை போட்டா வைரத்திற்குரிய கௌரவம் போச்சப்பா...

பாலு : முதலாளி! செல்வி...என்னை மிகவும் தூய்மை யாக...மனமாற...

லிங்கம் : பாலு! உனக்கு அதிகம் சொல்ல வேண்டிய தில்லை... அந்தப் பெண்...ரொம்பப் பெரிய இடத் திலே...இருக்க வேண்டிய பெண்... மிகப் பெரிய சொத்துடையவனுக்கு வாழ்க்கைப் படவேண்டிய பெண்...பாலு...

பாலு : முதலாளி...நீங்கள்...சொல்வது ?

லிங்கம் : பாலு... செல்வி மிகப்பெரிய செல்வச் சீமானுக் குன்னு சொல்லும் போது... நீங்கள் மட்டும்... இல்லையா என்றுதான் கேட்கப் போறே...

பாலு : முதலாளி... நான் அப்படி கேட்கிலீங்க ..

லிங்கம் : பாலு...நீ அப்படிக் கேட்கமாட்டாய்னு எனக்குத் தெரியும்... பாலு...குளத்திலே தாமரைப் பூத்தால் தான் தாமரைக்கு அழகு... அழகான பெண்கள் .. பங்களாவும் காரும் பணமும் உள்ள இடத்திலே இருந்தால்தான்...

பாலு : முதலாளி...என்னென்னமோ....சொல்றீங்க...அவள் என் இதயத்தில் குடியேறி விட்டாளே...

லிங்கம் : பாலு... நீ...உலகம் தெரியாதவன்... காகிதப் பூவும் சிவப்பா இருக்கு... ரோஜாவும் சிவப்பா இருக்கு... காகிதப்பூ சிவப்பா இருக்கிறதாலே மட்டும்...ரோஜாவாகிவிட முடியுமா...பாலு... வாழ்க்கை ஒரு ரோஜாச் செடி... அதிலே பருவம் என்று பூக்கிற பூவை......

ஏகாம்பரம் : [வந்து கொண்டே] இளமை என்கிற... வண்டு தான்... பருகணும்... முதலாளி...

லிங்கம் : ஓ... நீங்களா...? Yes... Yes... இளமை என்கிற வண்டுதான்... பருகணும்... Correct... Correct... வாழ்க்கை ஒரு ரோஜாச் செடி... அதிலே பருவம் என்று பூக்கிற பூவை...

ஏகாம்பரம் : இளமைங்கிற.....வண்டுதான்...பருகணும்.... முதலாளி...

லிங்கம் : வாழ்க்கை ஒரு ரோஜாச் செடி...அதிலே இளமை என்று பூக்கிற பூவை...

பாலு : பருவம் என்கிற வண்டுதான் பருகணும்.

லிங்கம் : ஆல்ரைட்... பருவம் என்கிற வண்டுதான் பருகணும் [அப்படியே உட்கார்கிறார்].

ஏகாம்பரம் : ஆமாங்க....முதலாளி.... நாளைக்கு சாமுண்டீஸ்வரி கோயிலிலே...செல்விக்கும் பாலுவுக்கும்

கல்யாணத்தைப் பண்ணிடலாம்னு...முடிவு பண்ணி யிருக்கிறேன்... தங்களுடைய...ஆசீர்வாதம்... இவங் களுக்கு வேணும்...

லிங்கம் : பெரியவரே...!... படைப்புகளை கடவுள் ஒழுங் காகத்தான் படைத்திருக்கிறார்... இந்த... மனிதர்கள் தான்... [தன்னையே கைவிரல்களால் குத்திக் கொண்டு] சரியாகப் புரிந்து கொள்ளாமல்... தடு மாறுகிறார்கள். பெரியவரே...

ஏகாம்பரம் : முதலாளி...!

லிங்கம் : நாளைக்கு... என் காரையே நீங்க எடுத்துக்கிட்டு கோயிலுக்குப் போகலாம்...

பாலு : முதலாளி... நீங்களும்...எங்களை வாழ்த்த வர வேண்டும்...

லிங்கம் : ஆல் ரைட்... பாலு... என் பிள்ளையைப் போலத் தானே Treat பண்றேன்.... ஆல்ரைட்....நானும் வர்றேன்...

ஏகாம்பரம் : முதலாளி...நீங்க...உண்மையிலே....கண்கண்ட கடவுள்...கண்கண்ட கடவுள்.

லிங்கம் : நோ...நோ... மிஸ்டர் ஏகாம்பரம்... நான் இந்த எஸ்டேட் முதலாளி...மிஸ்டர் எஸ். வி. லிங்கம்... I am the owner of S. V. Lingam Estate... கடவுள்... இந்த உலகங்கிற எஸ்டேட்டின் சொந்தக்காரர். [சிரிக்கிறார்]

பாலு : அவர் பெரிய கடவுள்...! நீங்கள் சின்னக் கடவுள் ..!

லிங்கம் : நோ...நோ... மிஸ்டர் பாலு... I am a poor widower, poor widower... கடவுளே...நீயும் .. அப்படியா...?

ஏகாம்பரம் : முதலாளி... நீங்க...என்ன...நினைச்சுக்கிட்டாலும் சரி..... கடவுள் என்பவர்.....நல்ல.....காரியம்... செய்கிறவங்க மனசிலே... குடிபுகுந்து கொள்கிறார்... நல்லவங்க எல்லாம் கடவுளைப் போன்றவங்க தானுங்க... முதலாளி !

லிங்கம் : O... I see... Where there is goodness there is Godliness.

[ திரை ]

**இடம் :**

பாலுவின் குடிசை

**நேரம் :**

இரவு 8 மணி

**உறுப்பினர்கள் :**

பாலு, செல்வி, ஏகாம்பரம்.

நிலைமை : [ஒருவர் மடியில் ஒருவர் படுத்துக்கொண்டு பேசிக் களிக்கிறார்கள். நீண்ட நேரம் கழித்து தள்ளாடித் தள்ளாடி ஏகாம்பரம் வந்து சாய்கிறார்]

பாலு t செல்வி.....நான்.... உனக்குச் சாமுண்டீஸ்வரிக்கு முன்னாலே...தாலி கட்டியப்போ... என்ன நினைச்சுக் கிட்டே ..

செல்வி : சாமுண்டீஸ்வரி... என்னை...ஒரு தோட்டக்கார னுக்கு மனைவியாக்கிறே...சீக்கிரமா... என் தோட்டக் காரக் கணவர்... எஸ்டேட்டுக்கு முதலாளியா வரணும் என்று வேண்டிக்கிட்டேன்...

பாலு : இம்... அப்படித்தான் வேண்டிக் கொண்டாயா? பணக்காரன் ஆகனும்கிற ஆசையே வரக் கூடாதே! பைத்தியக்காரி... நான் என்ன வேண்டிக்கிட்டேன் தெரியுமா?

செல்வி : எப்பொழுதுமே... தோட்டக்காரனய் இருந்து காலத்தைத் தள்ளிப்புடனும்னு வேண்டியிருப்பீங்க...

பாலு : உம்... அதுதான்...இல்லே.. சாமுண்டீஸ்வரி... சகல உலகத் தாயே !... நான் இந்தப் பெண்ணுக்குத் தாலி கட்டறேன்...என்னை நம்பி.. அவள் என்னிடம் கழுத்தைக் கொடுக்கிருள்....அவளுக்காக....என்னை... ஒப்படைக்கிறேன்... அவளை என் அன்புக் கூண்டி லிருந்து வெளியேற்றிவிடாதே...இப்படித்தான் நான் வேண்டிக்கிட்டேன்...

செல்வி : அத்தான்...உங்க மனமே......மனந்தான்......என் கண்ணத்தான்...என் செல்ல அத்தான்...

பாலு : செல்வி......நம் முதலாளி......மாலையை எடுத்து நம்மிடம் கொடுத்தபோது...நான்...உனக்கு மாலை போட்டேனே...அப்போ...என்ன நினைச்சே !

செல்வி : சாமுண்டீஸ்வரி...... என் கழுத்திலே வெறும் பூமாலையைத்தான் இப்போது போடுகிருர்...... அதுவே...வைர மாலையா ஆக வேண்டும்...என்று நினைச்சுக்கிட்டேன்.

பாலு : பைத்தியக்காரி ! பணம்...பங்களா...வைரமாலை...! நீ நினைப்பது...தவறு செல்வி...தவறு..! உன் மனம் குழந்தை மனம்... குழந்தை கடையில் விற்பதெல் லாம் விரும்புமே... அது மாதிரிதான்...ம்.. அது கிடக்கட்டும், நான் என்ன நினைத்தேன்...தெரியுமா...?

செல்வி : இவ்வளவு அழகான மனைவியைப்போல...நான் வேலை செய்கிற தோட்டம் எல்லாம் அழகா மிளிரனும்னு நினைச்சிருப்பீங்க...

பாலு : போடி...என்ன மனமோ... உன் மனம்? சாமுண் டீஸ்வரி, என் இதயத்தை இவளுக்கு மாலையாக எடுத்துச் சூட்டுகிறேன். இவள் இதயத்தை எடுத்து இவளும் மாலையா எனக்குப் போடணும்னு நினைச்சுக் கிட்டே...

செல்வி : அத்தான்...உள்ளம்...அத்தான் உள்ளந்தான்... [கட்டிக் கொள்கிருள்]

பாலு : ரொம்ப நேரம்...ஆயிடுச்சு...எங்கே தாத்தாவைக் காணுமே...

செல்வி : சின்னஞ் சிறுசுகள் கொஞ்சி விளையாடிக்கிட்டு இருக்கட்டும்... தான் போய் ஏன் தொந்தரவு கொடுப் பானேன்னு எங்கேயாவது... உட்கார்ந்திருப்பார்...

பாலு : அதோ...தாத்தா...வருகிருர்... [எழுந்திருக்கிருன்]

ஏகாம்பரம் : [காலில் ரத்தம் வடிகிறது......தள்ளாடிக் கொண்டே வருகிருர்] அப்பா...... கடவுளே......! கடவுளே...! பாலு...! செல்வி...!

செல்வி, பாலு : [ஓடிச்சென்று ஆளுக்கொரு பக்கமாகத் தாங்கிப் பிடித்துக்கொண்டு வருகிருர்கள்]

செல்வி : என்ன...தாத்தா...? என்ன தாத்தா நேர்ந்தது? ஐயோ காலில் ரத்தம் வடிகிறதே...

பாலு : தாத்தா...என்ன...தாத்தா... ஏதாவது கடித்து விட்டதா...?

ஏகாம்பரம் : பதட்டப் படாதீங்கப்பா...... உன் கடமையெல்லாம் முடிஞ்சு போச்சு...ஏகாம்பரம்...உன் கடமையெல்லாம் முடிஞ்சு போச்சுப்பா...எங்கிட்ட வந்தறப்பா...இப்படி...கடவுள் என்னைக் கூப்பிடறூர்ம்மா.. ...கூப்பிடறூர் நானும் போறனப்பா...... ம்...ம்...

செல்வி : என்ன தாத்தா...உளறீங்க...அப்படியெல்லாம் சொல்லாதீங்க தாத்தா...

பாலு : தாத்தா...உடம்பெல்லாம்...நீலமா இருக்குதே... என்ன தாத்தா...சொல்லுங்கோ...முதலாளி காரை எடுத்துக்கிட்டுப் போய்...டாக்டரை அழைச்சிட்டு வர்றேன்.

ஏகாம்பரம் : அதெல்லாம் .....ஒண்ணும் வேண்டாம்ப்பா... என் காலம் முடிஞ்சிருச்சு...காலன்...நாகப் பாம்பு ரூபத்திலே வந்து என்னை அழைச்சுக்கிட்டுப் போக வந்துட்டான்.

பாலு : விஷம் தீண்டிவிட்டதா......? ஐயோ தாத்தா...... வாங்க தாத்தா... டாக்டர் கிட்டே போகலாம்...

செல்வி : ஆ ..வாங்க தாத்தா...வாங்க தாத்தா...டாக்டர் கிட்டே போகலாம்...

ஏகாம்பரம் : என் கணக்கு முடிஞ்சிருச்சம்மா ...முடிஞ்சிருச்சு...எந்த டாக்டர் வந்தாலும் என்னைப் பிழைக்க வைக்க முடியாது... பாலு...செல்வியை சந்தோசமா வைச்சிருப்பா.... செல்வி....பாலுதான்.. உன் கண் கண்ட கடவுள்.....இரண்டு பேரும்.....சந்தோசமா.....

வாழணும்...ஆ...கடவுளே...கடவுளே...! [தலை சாய்கிறார்]

பாலு : ஐயோ......தாத்தா......எங்களை விட்டு போய்விட்டாயே !

செல்வி : ஐயோ......தாத்தா......அதற்குள்ளே போய்விட்டாயே ! [கதறல்]

பாலு : கடவுளே...! இதோ...கடவுள்...கடவுள்னு சதா நேரமும் உன்னையே நினைத்துக் கொண்டிருந்த தாத்தா உன்னிடமே வந்துவிட்டார்.

[ திரை ]

துணிவு கொண்ட நெஞ்சம்
துயரங்களை அடித்து விரட்டும்!
துணிவு ஒன்றிருந்தால் மற்ற
துணைகள் எல்லாம் தேடி வரும்!
துணிவு உள்ளவனே வெற்றியைத்
துரத்திப் பிடித்திருக்கிறான்!

— காவிரிநாடன்.

**இடம் :**

பாலுவின் குடிசை

**நேரம் :**

அந்தி நேரம்

**உறுப்பினர்கள் :**

பாலு, செல்வி.

நிலைமை : [செல்வியும், பாலுவும் ஏகாம்பரம் பிரிவை எண்ணி துயருறுதல்]

பாலு : [பூச்சட்டியிலுள்ள செடியோடு தோளில் சுமந்து கொண்டு வருதல்] செல்வி...!

செல்வி : இதோ... வந்துட்டேனுங்க [கையில் கரண்டியோடு வருதல்] என்னுங்க...இது...

பாலு : செல்வி...இந்த ரோஜாச் செடியை எங்கிருந்து கொண்டு வர்றேன் தெரியுமா...?

செல்வி : ஓ...தெரியுமே... தேவலோகத்திலிருந்து... இந்திரன் கிட்டே சண்டை போட்டு இதைக் கொண்டு வர்றீங்க...

பாலு : போடி...முட்டாள்... தேவலோகத்திலிருந்து இந்திரன் கிட்டே சண்டை போட்டுக்கொண்டு

வறது ஒன்னும் பிரமாதம் இல்லே... இப்போத் தான் ராக்கெட்டிலே போறுங்களே...அதைவிடு... இப்போ...தாத்தா காலம் ஆகி...எத்தனை மாசம் ஆச்சு...

செல்வி : [யோசித்தபடி] ஜனவரி முதல்நாள் காலமானார். இப்போ...ஏப்ரல் ஒன்று... அப்போ சரியா மூனு மாசம் ஆயிட்டுதே...

பாலு : மூனு மாசம் ஆச்சல்லோ...அவர் சமாதியின்மேல் ரோஜாச் செடி பதியம் வைச்சிருந்தேனல்லவா...

செல்வி : ஆமாம்...பதியம் வைச்சிருந்தீங்க...

பாலு : அதிலே...ஒரு பதியத்தை எடுத்துக்கிட்டு...வந்திருக் கிறேன்... அதை நம்ம குடிசையிலே...நம்மகிட்ட வெச்சு வளர்க்கப் போறேன். அதிலே பூக்கிற... பூவெல்லாம்...அவர் படத்துக்கு !

செல்வி : தாத்தாவை எப்பொழுதும்...நம்ம நெஞ்சில் மட்டும் இருக்கக்கூடாது .. நம்ம கூடவே மணமா வீசனும்னு கொண்டு வந்தீட்டீங்களா... என்ன இருந்தாலும் என் செல்ல அத்தானல்லவா ?

பாலு : செல்வி... அந்தச் செடியைப் பார்த்தா... தாத்தா நினைவு வரும்... அந்தப் பூவின் மணத்தை நுகர்ந்தா... தாத்தாவின் நேர்மையான பண்பு நமக்கு வரனும்... அதுக்குத்தான் கொண்டு வந்தேன்...

செல்வி : தாத்தா...இப்போ...இருந்தா...என்னைப் பார்த் துப் பூரிச்சுப் போவாரு ..இல்லீங்க...அத்தான்...

பாலு : ஆமாம் ..செல்வி...என்ன...ஒரு மாதிரி...

செல்வி : போங்களத்தான்...

பாலு : தாத்தாவைப்பற்றி அன்று கொஞ்சம் சொல்ல ஆரம்பிச்சே... அதுக்குள்ளே... எங்கோ போய் விட்டோம்... அதைக் கொஞ்சம் சொல்லிடேன் செல்வி...

செல்வி : ஓ...அதுவா...அத்தான்...! நான் மெட்ராசிலே இந்திரா ஹோம் என்ற ஆர்பனேசிலே...

பாலு : இந்திரா ஹோம் என்ற ஆர்பனேசிலே...

செல்வி : அதாவது...அனாதை விடுதியிலே... படிச்சிக்கிட்டு இருந்தேன்...அப்போ...ஒரு ஆளு...அடிக்கடி வந்து எனக்கு பலகாரம், பிஸ்கட்டு, அது இதுன்னு வாங்கிக் கொண்டு வருவான்... அதை எல்லாம் வாட்ச் மேன் வேலை பார்த்த தாத்தா ஏகாம்பரத்திடம் கொடுத்து என்னிடம் கொடுப்பான்... நானும் குஷியாக வாங்கிச் சாப்பிடுவேன்... ஃபிரண்சுகளுக்குக் கொடுப் பேன்...

பாலு : குஷியாக வாங்கிச் சாப்பிடுவேம் .. சொல்லு...

செல்வி : அந்த ஆளைப்பற்றி தாத்தாகிட்டே கேட்டேன்... அவன்தான் உன்னைக் கல்யாணம் பண்ணிக்கப் போறானும் – என்றார் தாத்தா.

பாலு : யாரு? 'அது இதுன்னு' வாங்கிக் கொடுத்தவன்? ஐயோ...பாவம்...

செல்வி : தாத்தா அப்படிச் சொன்னதும் எனக்கு ஒரே அழுகையா வந்தது...! வரட்டும்...வரட்டும் ..கத்தரிக் காய்க்குக் காலும் கையும் முளேத்தவனுட்டம் இருக் கிறுன்... பார்த்துக் கொள்கிறேன்...என்று நானும்... என் ஃபிரண்சுகள் எல்லாம் துடைப்பக் கட்டையைத் தயாராக வைத்திருந்தோம்...

பாலு : ஐயோ...பாவம்...

செல்வி : அதுக்குள்ளே எங்கள் விடுதி தீப்பிடிச்சு எரிஞ்சு போச்சு... அதிலே இருந்த என் தோழிகள் எல்லாம்... இறந்திட்டாங்க... [அழுகிறுள்]

பாலு : ஐயோ...பாவம்...அனுதை விடுதியே அனுதையா... போயிடுச்சா...ம்...ம்...

செல்வி : தாத்தா...ஏகாம்பரம்...என்னேக் காப்பாற்றினுர். மெட்ராசிலே இருந்தா அந்தப் பாவி வருவான்னு என்னே இங்கே அழைச்சுக்கிட்டு வந்தார்...

பாலு : அழைத்துக்கிட்டு வந்தார்...பாலுவைப் பார்த் தார் ..நல்ல பிள்ளே என்ருர்...மடியிலே நெருப் பென்ருர்...

செல்வி : ஐயோ...போதும்...சுய புராணத்தை நிறுத் துங்கள்...

பாலு : நிறுத்திட்டேன்... [வாயைப் பொத்துகின்ருன்]

செல்வி : அத்தான்...நம்ம வாழ்க்கையில் முன்னேருமல்... இப்படியே...தோட்ட வேலேயே பார்த்துக்கிட்டு இருப்பது...சரியா...?

பாலு : ஏண்டா......? நிம்மதியா...... இதயம் நிறைந்த வாழ்க்கையை வாழறே...சீக்கிரம் பணக்காரனாகி... நிம்மதியில்லாமல்...சாகாமல் சாவுடான்னு சொல்றியா...இறைவா...! இந்த நிம்மதியான வாழ்க்கையே போதும்டா...

[ திரை ]

ஒரு கூட்டம் பிறிதொரு கூட்டத்தை வஞ்சிப்பதற்காகச் செய்துகொண்ட சதிதான் மதம்! தவறுகளை மறைப்பதற்காக ஏற்படுத்திக் கொண்ட கவர்ச்சிப் பொருள்களே கடவுள்! விதி!! வினை!!!

— காவிரிநாடன்.

**இடம் :**

பங்களா சமையலறை

**நேரம் :**

இரவு 8 மணி

**உறுப்பினர்கள் :**

சேது, வேதா, கிட்டு.

நிலைமை : [கிட்டுவின் மூலம், செல்வி யைப் பற்றிய சேதி அறிதல்]

சேது : [புகையோடு வருதல்]

கிட்டு : அண்ணாச்சி...வணக்கமுண்ணே...

சேது : வணக்கம்...வணக்கம்...

கிட்டு : சௌக்கியங்களா..? வீட்டிலே எப்படி இருக்காங்க கிண்ணே !

சேது : ஓய் ..கிட்டு... வீடாவது...காடாவது......எல்லாம் ஒண்ணு தானய்யா...!

கிட்டு : அண்ணாச்சி......வீட்டிலிண்ணு...உங்க......சம்சாரம் எப்படி இருக்காங்கிண்ணே...?

சேது : எனக்கேதய்யா...சம்சாரம்...சம்சாரம்...ஒரு சமா சாரத்திலே தலைக் கொடுத்திட்டு முழிக்கிறேனே... போதா...தா...?

கிட்டு : என்ன சமாச்சார முன்னே......! நான் அதைக் கொஞ்சம் தெரிஞ்சுக்கலாமுன்னே...!

சேது : டிரைவர்...கிட்டு......உனக்கு வேலே......வண்டியை டிரைவ் பண்றது.

கிட்டு : அண்ணாச்சி... வண்டியை மட்டும் டிரைவ் பண்ணற வனல்ல......ஏதாச்சி......கஷ்டமான காரியமா இருந்தா சொல்லுங்கோ... ஐடியாங்கிற காரிலே ஏத்திக்கிட்டு போயி...The Endங்கிற பள்ளத்திலே போட்டு மூடிடறேன்னே...

சேது : அப்படியா...? உங்க முதலாளி மோகன் சொன்ன பெண் கிடைக்கலேயே... இந்திரா ஹோமிலே போய்ப் பார்த்தேன்... வெறும் குட்டிச்சுவர்தான் நிக்குது...

கிட்டு: அப்படின்ன .. கழுதைகூட நிக்குமோ...ன்னே...

சேது : ஆமா...நிக்குது... உன்னேயும் வரச் சொல்லுது...

கிட்டு : எதுக்கி...ன்னே...

சேது : அந்தக் குட்டிச்சுவருக்குத் துணேயா நிக்கிலாம்னு...

கிட்டு: அண்ணச்சி...என்னேயும்...கழுதையா நினேச்சிட்டிங்க. தப்புன்னே.....அண்ணாச்சி.....எனக்கு ஒரு.....விஷயம் தெரியுமு...ன்னேன்...

வேதா : [வந்து கொண்டே] வாங்கோ... இந்தப் பேச்சு இழப்பாங்கிட்டே...என்ன பேச்சு வேண்டி இருக்கு... வாங்க...உள்ளே...போவோம்...!

கிட்டு : வேதா...என்னு....சொன்னே....பேச்சு இழப்பானு... நான்...இந்த டிரைவர் கிட்டையும்...செத்துப்போன கிழட்டுப்பய ஜானுன்னு நினைச்சிக்காதே......நான் இலட்சம்....லட்சமா....போட்டு....வாங்கின காரிலே சவாரி போறவ...! சும்மா அல்ப சுல்பமா நினைச்சுக் காதின்னே...

சேது : கிட்டு...உனக்குத் தெரிந்த விஷயத்தைச் சொல் லப்பா...ஏய்...வேதா...கிட்டைப்பற்றி என்ன நினைச் சுக்கிட்டே....அவன் காரை எடுத்தா...ரோட்டிலே போறதெல்லாம்...ஆஸ்பத்திரிக்குப் போகும்...ஆஸ் பத்திரிக்கு போறவங்களெல்லாம் நாலு கால் கட்டிலே....காட்டுக்குப் போவார்கள்....இல்லையா.... கிட்டு...

கிட்டு : அண்ணுச்சி....கிண்டல் செய்யாதீங்க....நான் ஒண் ணும் அரசாங்க பஸ்ஸை ஓட்டலே...

வேதா : இந்த முக்ரைகட்டைக்கு அரசாங்கப் பஸ் வேறே ஓட்டணுமா...?

சேது : வேதா......அப்படிச் சொல்லாதே.. கிட்டை ! அரசாங்க 'பஸ்ஸை அவன் ஓட்டனும்...மக்கள் ஜனத் தொகை குறையனும்...

கிட்டு : கரெக்கட் அண்ணே ! குடும்பக் கட்டுப்பாடு... செய்யறதைவிட.....சர்க்காரே நிறைய பஸ்ஸுகளை விட்டு மக்களை...சய்...சய்ன்னு ஏத்திக் கொன்னுப் புடணும்...

வேதா : ஆஹா... ஐடியா.. ஏய்யா.. உன் ஐடியாவை...... அரசாங்கத்திற்குக் கொஞ்சம் இரவல் கொடய்யா...

சேது : அதைத்தான்...இப்போ...அரசாங்க பஸ்களை ஓட்டுகிற டிரைவர்கள் ஒழுங்காச் செய்ருங்களே ! கிட்டு... விஷயத்துக்கு...வாய்யா. வேதா...கிட்டுவிற்கு ஒரு ஸ்பெஷலா...மசால் தோசை போட்டுக்கிட்டு வா... நெய்வாசம்...கமாகமான்னு ஜமாய்க்கனும். [கண்ணசைக்கிருன்]

வேதா : உங்களுக்கின்னு.....சொல்லுராங்கோ......நெய் தோசை...

கிட்டு : எனக்குன்னு...

வேதா : நொய் தோசை...சொய்யின்னு...சுட்டுப் போடுவேன்...

சேது : நெய்...நொய்...அப்புறம்...சொய்...ஆஹா என்ன ரைம்...என்ன...ரைம்...

கிட்டு : அண்ணுச்சி...மெய்...பொய்...இதைக் கூடச்...சேர்த்திக்கிங்க...

சேது : அர்த்தம் இல்லியே...

வேதா : ரைம்க்கா...அர்த்தமா பாக்கிருங்க ! நான் சமைக்கிறதெல்லாம் ருசியா பார்க்கிருங்க. ஏதோ சமைச்சுப் போட்டா திங்கனும்......

கிட்டு : அப்போ...நீ சொல்றதைக் கேட்கனுமான்னே...

சேது : அப்படி...இல்லே ..கிட்டு......அர்த்தம் சொல்றேம் பாரு... சொய்ங்கிற ஓசையோடு நெய்ங்கிற பொய்யைத் தடவி...நொய்ங்கிற மாவை எடுத்து ..ஊத்தியதும்...கடைசியிலே...மெய்ங்கிற தோசை கிடைக்குது!

அதுபோல....நீ....நொய்ங்கிற விஷயத்தைச் சொன்ருல்...நெய்ங்கிற பொய்யைத் தடவி...நான் சொய்ங்கிற ஓசையோடு...மெய்ங்கிற தோசைச் சுடுவேன்...'

**கிட்டு :** அண்ணுச்சி...வேதாவை ..என் பக்கம்...திருப்பலே...

**சேது :** திருப்பறேன் ! வேதா...கொஞ்சம்...திருப்பு ..

**வேதா :** [கரண்டியைத் திருப்பிக் காட்டுகிருள்]

**கிட்டு:** திருப்பாதே...சும்மா...திருப்பாதே...திருப்பி... திருப்பி...என்னே வெறுக்காதே...

**சேது :** ஏய்...! வேதா...கொஞ்சம் உள்ளே போம்மா... அம்மா...தெய்வமே...பத்ரகாளி அம்மையே...

**வேதா :** போறேன்...போறேன்... நானுன்ஞ உங்களுக்குப் பிடிக்குமா...... [ திருப்பிக்கொண்டே உள்ளே போகிருள் ]

**கிட்டு :** அண்ணுச்சி .. வேதா... இடுப்பைத் திருப்புவதே... அழகு...ன்னே ! என்ன கவர்ச்சி...ன்னே...!

**சேது :** Subject-க்கு வாப்பா...! விஷயத்தைச் சட்டுன்னு முடி...

**கிட்டு :** அண்ணுச்சி...அந்த இந்திரா ஹோம் அனுதை விடுதியிலே எல்லாம் எரிஞ்சு செத்திட்டாங்களான்னே. ஒரு பொண்ணு தப்புச்சுதாம்...அந்தப் பொண்ணும் ஒரு ஆளும் எங்கோ போயிட்டாங்களாம்... அந்தப் பொண்ணைத்தான்... ஜான் லவ் பண்ணிக்கிட்டு... இருந்ததாகக் கேள்வி...

சேது : அப்போ...அந்தப் பொண்ணு உயிரோடே இருக் குன்னு...சொல்லு...

கிட்டு : ஆமான்னே...ஜான் உயிரோடு இருந்தப்போ அடிக் கடி...இந்திரா ஹோமுக்குப் போயிட்டு வருவான்... நானே...பார்த்திருக்கேன்னே...

சேது : கிட்டு... வேதா... உனக்காகத் தயாரா... போட்டு வெச்சிருப்பா...போய்... சாப்பிடு...வரட்டுமா...?

[ திரை ]

**இடம் :**

பாதையோரம்

**நேரம் :**

அந்தி நேரம்

**உறுப்பினர்கள் :**

சேது, கல்லூரி மாணவர் இருவர்,
கிளி சோசியர்.

நிலைமை : [சேது, செல்வி இருக்கு மிடத்தை ஒருவாறு அறிதல்]

**கிளி சோசியன் :** *கிளி சோசியம்...கிளி சோசியம்... மனிதர் கள் கணித்துக் கூற முடியாததை.....பறவைகள் கூறும் ! பகுத்தறிவு மனிதர்களுக்குத் தெரியாததை... ஐந்தறிவு...கிளி...உங்கள்...எதிர்காலம்...நிகழ் காலம் ...வருங்காலம்...சொல்லுது...பத்து பைசா...*

**முதல் மாணவன் :** *டேய். . வாடா.... கிளி...சோசியம்.... பார்க்கலாம் ..*

**2ஆம் மாணவன் :** *கிளி சோசியம் வேண்டாமடா... கை ரேகை பார்க்கலாம்.*

**கிளி சோசியன் :** *வாங்க...சார்...வாங்க...கைவிட்டுப்போன பொருள் வருமா...? வராதா...? காதலிக்கின்ற பெண் கிடைப்பாளா...? கிடைக்கமாட்டாளா...? பரீட்சையில் வெற்றி கிடைக்குமா...? கிடைக் காதா...? எல்லாப் பதிலும்... பத்து பைசாவுக்குக் கிடைக்கும்... வாங்கோ...சார்...வாங்க ...*

**சேது :** [வந்துகொண்டே] ஹலோ...மாணவர்களே...!

**முதல் மாணவன் :** ஹலோ...ஓ...I...See...குட்மார்னிங்...

**2ஆம் மாணவன் :** குட்மார்னிங்...

**சேது :** குட்மார்னிங்... கிளி சோசியம் [காசை எடுத்துப் போடுதல்] பாரய்யா...!

**முதல் மாணவன் :** சார்... சோசியம் பார்க்கிறுங்களா... கைவிட்டுப் போன பொருள்...காதலிக்கின்ற பெண் பரீட்சையில்...வெற்றி...லட்சாதிபதி ஆக முடியுமா? முடியாதா...? எல்லாமே...சொல்லுதாம்...கிளி...

**2ஆம் மாணவன் :** சார்... இந்திரா... ஹோமிலே Fire ஆக்ஸிடெண்ட்டிலே... செத்துப்போன என் லவ்வர் உயிரோடு திரும்பி வருவாளா.. பாருங்கோ...சார்... பாருங்க...

**சேது :** இந்திரா...ஹோமிலே...உன் லேடி லவ்வு.. !

**சோசியன் :** [சேதுவைப் பார்த்து] ஐயாவுக்குப் பார்த்துக் கூறுடா...ராஜா...பார்த்துக் கூறு...

**சேது :** இம்...பார்க்காமலே...சொல்லட்டும்.

**சோசியன் :** ஐயா...ஒரு கனியைத் தேடிகிட்டாரு... கனி கையை விட்டுப் போயிட்டுது... வாகனத்திலே ஏறி வடக்குத் திசை நோக்கிப் போய்விட்டது... வடக்குத் திசைப்பக்கம்...வளமான பட்டணத்திலே...

**முதல் மாணவன் :** வடக்குத் திசை பக்கம்... வளமான பட்டணத்திலே...

2ஆம் மாணவன் : வடக்குத் திசைப் பக்கம்... வளமான பட்டணத்திலே...ஓ... வளமான பட்டணம்... பெங்களூர்தான்... பெங்களூர்தான்...

சேது : ஓ .I .. See... பெங்களூர்... ஆ... ஹா... ஐடியா... ஐடியா...

சோசியன் : பச்சைக் கிளி பேசறது...பச்சையான உண்மை... பச்சையான உண்மை...பத்து பைசா...பத்துபைசா...

சேது : கிளி...பேசறது...உண்மைதானய்யா...உண்மைதான்.

முதல் மாணவன் : சோசியம்... இந்தா... இன்னொரு பத்து பைசா... பஸ் ஸ்டான்டிலே... ஒருத்தி வழக்கமா வந்து நிற்பா... அவளை இரண்டு நாளாகக் காண வில்லை...அவள்...மீண்டும் வருவாளா...வந்து இன்பம் தருவாளா...

2ஆம் மாணவன் : சோசியம்...என்ன பத்து பைசா? இந்தா ஒரு ரூபா...! என்னைப் பார்த்து ஒருத்தி சிரிச்சு கிட்டுப் போறவ...ரெண்டு நாளா...குனிஞ்சுக்கிட்டுப் போகிறாள்... அவள் மனம் மாறுமா...?

சேது : அய்யோ... உலகமே ! மெட்ராஸ்லே... தமிழ் நாட்டின் மொத்த முட்டாள்களும்...... இங்கேதான்...... இருக்காங்களா...? சினிமா தியேட்டர், ரெயில்வே ஸ்டேஷன், பீச், சோசியகாரன், அதிர்ஷ்ட ரேகைக் காரன் ! ஐயோ ! பகுத்தறிவுள்ள தமிழ்நாடா ...ம்.. ம் ஓ ..My God... நான் இப்போ... எங்கே போகனும்... பெங்களூர்...பெங்களூர்...

[ திரை ]

பசித்தவன் படுத்திருப்பதும் பழுத்தவன் ஓடிப் பார்ப்பதும் பகுத்தறிவாளன் நம்பிக்கொள்வதும் இன்றைய புதுமையின் எடுத்துக்காட்டுகள்!

— காவிரிநாடன்.

**இடம் :**

மோகன் பங்களா

**நேரம் :**

இரவு 9 மணி

**உறுப்பினர்கள் :**

வேதா, சேது, கிட்டு.

நிலைமை : [ சேதுவும், வேதாவும்
பெங்களூர் நோக்கிப் புறப்படல்]

சேது : வேதா...வேதா !

வேதா : நீங்களா... வாங்க... உங்களைப் பார்க்கலையின்னு மனசு...டக்கு...டக்குன்னு அடிக்குது...

சேது : வேதா...உன்னால்...ஒரு உதவி வேண்டும்...

வேதா : என்னால்.....உங்களுக்கு.....உதவி......வேண்டும்...... ஐயோ...கேளுங்களேன்...கேளுங்களே...என்ன உதவி வேண்டும்னாலும் கேளுங்களே...

சேது : என்கூட....நீ வர...வேண்டும்...

வேதா : உங்க கூடங்களா...? காலமெல்லாம் உங்க கூடவே சுத்திக்கிட்டே இருக்கிறதுக்குத் தயார்...

சேது : வேதா...உடனே...புறப்படு...

வேதா : எங்கே... போகலாங்க .. திருப்பதியிலே போய் கல்யாணம் பண்ணிக்கிட்டு வறதுக்குங்களா... இல்லை ரிஜிஸ்டர் ஆபிசுக்குங்களா...

சேது : அதெல்லாம்...... எங்கே எதுக்குன்னு கேட்கக் கூடாது...நான் போற இடத்திற்கு நீ வரணும்... அவ்வளவுதான்...

வேதா : ஏன்...என்கிட்டே... விஷயத்தைச் சொல்லப்புடாதுங்களா...? நான் உங்கள் இதய ராணி இல்லீங்களா ?

சேது : ஐயோ...ஐயோ...நீ என் இதய ராணிதான்...ம்... புறப்படு...நேரமாச்சு...

வேதா : இதோ... புறப்பட்டுவிட்டேன் [உள்ளே ஓடுகிருள்]

சேது : சீக்கிரம்! இந்தக் காலத்திலே...புறப்படு என்று சொன்ன போதும்... பெண்கள்... புறப்பட்டு விடராங்க...பருவப் பெண்ணச்சே... கல்யாணம் ஆகாத பெண்ணச்சே...ஒரு இடத்துக்கும் போகக் கூடாதுன்னு நினைக்கிருங்களா ? எப்போ... சான்ஸ்... கிடைக்குமுன்னு காத்துக்கிட்டு இருக்காங்களே... பெண்ணை ஆண் தேடிப் போற காலம் மாறி...ஆணைத் தேடி...பெண் போற காலமா போச்சு...

வேதா : [மூட்டையோடு] ..... புறப்பட்டுவிட்டேனுங்க... புறப்பட்டுவிட்டேன்.

சேது : புறப்பட்டுவிட்டாயா ? ஆகா... என்... காதல் எறும்பே...ஓ...கரும்பே...போகலாமா...

வேதா : போகலாங்க...போகலாங்க...

சேது : [வேதா கைகளைப் பிடித்துக் கொண்டு நடத்தல்]

கிட்டு : [வந்துகொண்டே] ஐயோ...சேத்தய்யா...வேதாவை அழைச்சுக்கிட்டு எங்கே போறீங்கி...ன்னே...

வேதா : ஐயோ...பூனே குறுக்கே வந்துடுச்சு... வந்துடுச்சு...

கிட்டு : ஏய்...பூனேயா நான்... சேத்தய்யா... வேதா... புலியைப் பார்த்துப் பூனேயின்னு சொல்லுது...நீங்களும் கேட்டுக்கிட்டே நிற்கிறீங்க...

சேது : கிட்டு...இப்பொழுது...உன்னிடம்... பேச... டைம்... இல்லே...வர்ரேம்...

கிட்டு : ஐயோ...எங்கே...போறீங்கின்னு...?

வேதா : உன்கிட்டே.....சொல்லனுமா... போய்யா.... ஃபிரேக்கு ..

சேது : சொர்க்கபுரிக்குப் போகிரேம்...வர்ரேம்...

கிட்டு : சொர்க்கபுரிக்கா... அப்படீன்னு ஒரு தேசமே இல்லியே...!

[சேதுவும் வேதாவும் கைகளேப் பிடித்துக்கொண்டு போகிருர்கள்].

[ திரை ]

மனிதன் மண்ணில்தான் பிறக்கிறான். மண்ணில்தான் இறக்கிறான். எனவே, அவன் சொர்க்கத்திற்கும் செல்வதில்லை. நரகத்திற்கும் போவதில்லை!

— காவிரிநாடன்

**இடம் :**

லிங்கம் எஸ்டேட்டிலுள்ள குடிசை

**நேரம் :**

மாலை 5 மணி

**உறுப்பினர்கள் :**

செல்வி, லிங்கம், சேது, வேதா.

நிலைமை : [சேதுவும், வேதாவும் சேர்ந்து, செல்வியைத் தம் பக்கம் ஈர்த்தல்]

செல்வி : [பூ கட்டிக் கொண்டிருத்தல்]

லிங்கம் : [வந்துகொண்டே] செல்வி... பாலு...எங்கே ..

செல்வி : இன்னும் தோட்டத்திலே இருந்து வர்றலீங்க...

லிங்கம் : ஓ...You...are...alone...! பாலு....இன்னுமா.... வரவில்லே? செல்வி... நீ இப்படித் தனியா இருக்கிறது...சரியில்லேயம்மா... ஓய்வான நேரங்களில்... பங்களாவுக்கு...வந்திட்டு போமம்மா... [பற்றியிருந்த சுருட்டு அணைந்து விடுதல்]

செல்வி : [எழுந்து உள்ளே போகிறாள்]

லிங்கம் : செல்வி... Fire box...சுருட்டில் நெருப்பு அணைந்து விட்டது...(தனக்குத்தானே) ஆம்! உன்னைப்பற்றி... என் நெஞ்சில் பற்றியிருந்த ஆசை என்னும் நெருப்புக் கூட அணைந்து விட்டதம்மா...!

செல்வி : நெருப்புப்பெட்டி...இல்லீங்க... நீங்க...தயவு செய்து...போய்விடுங்க...

லிங்கம் : [அதிர்ச்சி அடைந்தவளுய்] என்னம்மா...சொன்ளுய்... I am very sorry... Very sorry... தவருக... நினைத்துவிட்டாய்... That is my mistake... ஆல் ரைட்... [லிங்கம் போகின்ருர்]

செல்வி : இம்...ம்... [பெருமூச்சு விடுகிருள்]

சேதுவும்<br>வேதாவும் } [வருதல்]

வேதா : அம்மா...

சேது : வணக்கம்... அப்பாடா... இந்தப் பெங்களூரையே வலைப் போட்டுப் பார்த்தோம்... மீனு இங்கேதான் கிடைக்கும்போல் தெரிகிறது....வேதா....வலையை.... வீசு...

செல்வி : [திகைக்கிருள்]

சேது : அம்மா...ரொம்ப அழகா...இருக்காங்களே... பெரிய இடத்துப் பெண்ணுச்சே... அம்மா...நீங்கள் மெட்ராசிலே இந்திரா ஹோமிலே.. படித்த பெண் தானே.

செல்வி : நீங்க....யாருன்னு சொல்லாமல்....பேசிக்கிட்டே இருக்கீங்களே !

வேதா : நாங்களா... இவரு...சேது ! நான் வேதா !!

செல்வி : வேதா...! சேது...!! [சிரிக்கிருள்]

சேது : வேதா... அம்மா....மிகவும்....நல்லவங்க. .. பார்த்தாலே தெரியுது......அகத்தின் அழகு......முகத்திலே தெரியுதே...

வேதா : முகத்தின் அழகு.....முகத்திலே தெரியுதுன்னு..... சொல்லுங்கோ...மகாலக்ஷ்மியாட்டம் இருக்காங்களே... திருஷ்டி பட்டுறும்...திருஷ்டி... [கைகளை மடக்கி...நெறித்துக் கொள்ளுதல்]

சேது : இந்திரா...ஹோமிலே...படித்ததைப் பற்றிக் கேட்டேன்...சொல்லாமலே இருக்காங்களே...

வேதா : அதெல்லாம்...அனாவசியமான...கேள்வி ! இல்லையம்மா ?

செல்வி : அதெல்லாம் ..இல்லீங்க... அவர் சொல்வது சரிதான் ! நான் அங்கேதான்...படிச்சேன்...

வேதா : பார்த்தீங்களா...நீங்கள் சொல்றது...கரெக்ட்டா... போச்சு...

சேது : அப்பாடா... ஒரு காரியம் வெற்றி.... வேதா.... மேற்கொண்டு...துப்பைக் கண்டுபிடி.

வேதா : அம்மா...கொஞ்சம் உள்ளே வர்றீங்களா...
[செல்வியும் வேதாவும் உள்ளே செல்லுதல்]

சேது : நல்ல செய்தியா...இருக்கனும்...காலம் இருக்குதே... காலம்...அது...சரியாகத்தான்...வேலை செய்கிறது...!

வேதா : [குதித்துக் கொண்டே]ஆஹா...ஆஹா...புதையல் கிடைச்சுடுச்சு...தேடி வந்த செல்வம் கிடைச்சிருச்சு... நீங்கள் சொன்னபடியே அடையாளம் இருக்குது...

சேது : முதுகிலே ...மச்சம்...இருக்கா ...ஆ...வேதா...
[வேதாவைக் கட்டிக் கொள்ளுதல்]

வேதா : ஐயே...விடுங்க...நீங்க ரொம்ப.. மோசம்...

செல்வி : [செல்வி குடிசையிலிருந்து வருதல்]

சேது : அம்மா... உன்...பெயர்...

செல்வி : செல்வி...

வேதா : நல்ல பேரு! ஐயோ...பாவம்... பெரிய கோடீஸ்வரன் மனைவி வயிற்றிலே பிறந்துவிட்டு...குடிசையிலே இருக்கு...

சேது : ஏர்கண்டிஷன் பங்களா! ஏறிச் செல்வதற்கு... ஏரோப்பிளேன் போன்ற காரு!! எடுபிடி ஆட்கள்!!! எப்போதும் இன்பத்திலே...Enjoy பண்ணிக்கிட்டு இருக்கவேண்டிய பொண்ணு.....குடிசையிலே.... குனிந்து குனிந்து...வாழ வேண்டி யிருக்கிறது.....

வேதா : ரெண்டு கைகளுக்கு...வைரக்கல் பதித்த வளையல்கள்.....கழுத்திலே....மரகதக்கல் பதித்த நெக்லஸ்.... காதிலே...வைரத்தோடு...இம்....எப்படி எப்படியோ கோயிலே இருக்கிற அம்மனைப் போல இருக்க வேண்டிய பொண்ணு...குடிசையிலே அம்போன்னு குந்திக்கிட்டு இருக்காங்களே...

செல்வி : நீங்கள்...சொல்றது... புரியலையே ..

சேது : செல்வி...நீ ..தங்கக் கோபுரத்தின் கீழ் இருக்கிற விக்கிரகம் மாதிரி...ரொம்போ ..ரொம்போ...பெரிய இடத்திலே பொறந்த பொண்ணம்மா.....ஏதோ..... காலக் கோளாறோ என்னமோ....பாவம் ... நீ....ஓலைக் குடிசையிலே ஒடிந்த குத்து விளக்கு மாதிரி.. .. கிடக்கிறே....

செல்வி : கொஞ்சம்...விவரமாகச் சொல்லுங்க... நானும் தெரிஞ்சிக்கிறேன்.

வேதா : நீங்க தெரிஞ்சுதான் ஆகனும்... நாங்களும்... அதைக் கூறி.. உங்களை...உரிய இடத்திலே...கொண்டு சேர்க்கத்தான் வந்திருக்கின்றோம்.

சேது : ஆமாம்...! வேதா .. ரகசியத்தை...இப்போ சொல் லிடாதே .. அப்புறம்...சொல்லலாம்...

செல்வி : இரகசியமா ? புதிர் போடாதீங்க... சொல்லி டுங்கோ...

வேதா : ரகசியமாவது...ஒன்னுவது... நான் சொல்றம்மா கவலைப்படாதே... குப்பையிலே கிடந்தாலும் மாணிக்கம்...மாணிக்கந்தானே.

சேது: வேதா... என்ன சொல்றே ... மாணிக்கம் குப்பை யிலே இனி...கிடக்காது .. மாளிகைக்குப் போகப் போவுது.

செல்வி : விளக்கமாக் கூறுமல்...பேசிக்கொண்டே போறீங் களே...

வேதா : நாங்கள் சொல்றதை யாரிடமும் சொல்லமாட் டேன்னு சத்தியம் பண்ணுங்க...

சேது : ஆமாம்...செல்வி... எங்களுக்கு வாக்குறுதி தந்தால் சொல்வோம்.

செல்வி : சத்தியமா... யாரிடமும் சொல்லமாட்டேன்.

சேது : [பையில் மறைத்து வைத்திருந்த கடிதத்தை எடுத்துக் கொடுக்கிருன்]

செல்வி : [கடிதத்தை வாங்கிப் படிக்கிறாள்.]

சேது : படி...படி... படித்துக் கொண்டே இரு...

வேதா: விதி...எப்படியெப்படி...விளையாடுது...பார்த்தீங்களா...?

சேது : மதி...விளையாடுது... மதி...விளையாடுது...

செல்வி : [வியப்போடும் அதிர்ச்சியோடும் கடிதத்தைப் படித்து முடிக்கிறாள்]

சேது : என்ன.. விஷயம் தெரிஞ்சுதா...? ரகசியம் ரொம்ப carefullலா இருக்கணும்.

செல்வி : என் கணவர் வரும் நேரமாச்சு... தயவுசெய்து நாளைக்கு இதே...நேரத்துக்கு வந்துடுங்க...

சேது : சரி... அப்படியே நாளைக்கு வர்றோம்... ஒரு முடிவோடு இருக்கணும்.

வேதா : ஆமாம்மா...! நீங்க சட்டுப்புட்டுன்னு ..ஒரு முடிவு செய்து விடுங்க... கையிலே...வெண்ணெயை வைச்சுக்கிட்டு...நெய்யிக்கு அலையக்கூடாது.

செல்வி : என் கணவரிடம்...கலக்காமல்...எப்படி முடிவுக்கு வரமுடியும்...என் கணவரைக் கலந்துதான் முடிவுக்கு வருவேன்.

சேது : சத்தியம் செய்து கொடுத்திருப்பதை மறந்திட்டே...

வேதா : என்னம்மா...அதற்குள்ளே மறக்கலாமா...? ரகசியத்தை சத்தியமா... யாரிடமும் சொல்ல மாட்டேன்னு...சத்தியம் செய்திருக்கிறே...மறந்துட்டியா ?

செல்வி : சத்தியத்தை மீறவில்லையே... எப்படி என் கணவரிடம் கலக்காமல்... முடிவு செய்ய முடியும் ?

சேது : இந்தாம்மா... ஆலோசனை...யோசனை ஒண்ணுமே வேண்டா... விஷயத்தை என்னிடம் விட்டு விடு... நான் பார்த்துக் கொள்கிறேன்.

செல்வி : [யோசித்தபடியே] ஆமாங்க... என் கணவர் பணக்கார வாழ்க்கையே வேண்டாம் என்பவர். அவரிடம் கூறினல்...ஒன்றுமே...நடக்காது... எதற்கும்....கொஞ்சம்....நான்.... யோசிக்க வேண்டும்.... அதோ... என் கணவர்...வரும்...சத்தம்...! நீங்கள் போய் வாருங்கள். [செல்வி குடிசைக்குள் செல்கிருள்]

சேது, வேதா : [இருவரும் கைகளைப் பிடித்துக் கொண்டு வெளியேறுதல்]

[ திரை ]

விதைத்தவன் அறுவடை செய்கிருன்,
விழித்தவன் முன்னேறிக் கொள்கிருன்,
பதைத்தவன் சிதைந்து விழுகிருன்,
பதுங்கியவன் பயனை எட்டிப் பிடிக்கிருன் !

— காவிரிநாடன்.

**இடம் :**

பாலுவின் குடிசை

**நேரம் :**

காலை நேரம்

**உறுப்பினர்கள் :**

செல்வி, பாலு.

நிலைமை : [செல்வி தன் கணவனிடம் உயர்ந்த வாழ்க்கை வாழ வேண்டும் என்று வாதாடல் – அதில் அவள் தோல்வி காணல்]

செல்வி : அத்தான்...ஒன்று கேட்கப்போகிறேன்...கோபிக்க மாட்டீர்களே.. ?

பாலு : செல்வி... அன்புடைய மனைவி நீ ! அறிவுடைய மனைவி நீ ! என் இதயத்திலே கோயிலாகக் குடி கொண்டிருக்கும் பத்தினித் தெய்வம் நீ ... தோட்டக் காரன் மனைவியாயிருந்தாலும்...மனத்தால் கோடீஸ் வர வாழ்க்கையை வாழ்ந்து கொண்டிருக்கும் வற்றாத ஜீவநதி நீ.

செல்வி : இம்... இம்... நீங்கள்தான்... எல்லாவற்றிற்கும் பொருத்தமானவர்... அத்தான்... நான் பள்ளியிலே படித்த அருட்பா பாடலைத்தான்... உங்களுக்கு சொல்ல வேண்டும் போல் இருக்கு.

பாலு : அருட்பாவா ? அந்த அருள் வழியும் பாடலை சொல் கண்ணே !

செல்வி : அன்பெனும் பிடியுள் அகப்படும் மலையே!
அன்பெனும் குடில் புகும் அரசே!
அன்பெனும் வலைக்குட்படு பரம் பொருளே!
அன்பெனும் கரத்தவர் அமுதே!
அன்பெனும் கடத்துள் அடங்கிடும் கடலே!
அன்பெனும் உயிர் ஒளிர் அறிவே!
அன்பெனும் அணுவுள் அமைந்த பேரொளியே!
அன்புருவாம் பர சிவமே!

பாலு : செல்வி... [இடையைக் கட்டிக்கொண்டு] வாழ்க்கை முழுதும் கேட்டுக்கொண்டே இருக்கும் பாடல் செல்வி!

செல்வி : அத்தான்...இப்போது...நமக்கு லாட்டரி சீட்டில் ஒரு லட்ச ரூபாய் விழப்போகிறது என்று வைத்துக் கொள்வோம்... அதை என்னத்தான் செய்வீர்கள்?

பாலு : ஒரு லட்ச ரூபாய்...லாட்டரி... இதில் எல்லாம் எனக்கு நம்பிக்கையே கிடையாது... உழைக்காமல் நகத்தில் அழுக்குப் படாமல் வருகிற பணத்தை...ஒரு பாவத்தின் கொடூரமான தண்டனை என்றே கருது கிறேன்...செல்வி.

செல்வி : அத்தான் ..அதிர்ஷ்டம் என்பது கடவுள் முன் வந்து அளிக்கும் நன்கொடை என்பதை மறந்து விட் டீர்களா ?

பாலு : செல்வி... உழைப்பால் வருகின்ற ஒரு காசு...ஒரு கோடிப் புகழ் பேசும் சக்தியுடையது ஆனால் உழைக் காமல் வருகிற ஒரு கோடிப் பணம்...அந்த ஒரு காசிடம் நிற்க முடியாது.

செல்வி : அத்தான்! அருள் இல்லார்க்கு..அவ்வுலகம் இல்லை. பொருள் இல்லார்க்கு...இவ்வுலகம் இல்லை என்று வள்ளுவர் சொல்லியதை நினைத்துப் பாருங்கள்.

பாலு : ஆமாம்...கண்ணு...அருள் இல்லையென்றால் ஆண்டவனின் உலகத்தில் இடமில்லை... பொருள் இல்லையென்றால்...இங்கே வாழ்க்கை இல்லைதான்... ஆனால் உழைக்காமல்....உடலை வருத்தாமல் ...கடமையைச் செய்து பெறாமல்...பிறரை ஏய்த்து, ஏமாற்றி, எத்திச் சுரண்டி ..வயிற்றிலடித்து ..ஏழைகளை வதைத்து சம்பாதிக்குமாறு வள்ளுவர் சொல்லவில்லையே...!

செல்வி : அத்தான் . ! உங்களைப் புரிந்துகொள்ள முடியவில்லையே...நம்ம ..வாழ்க்கை இந்தக் குடிசையிலே... கழிந்துவிட வேண்டியதுதானா...

பாலு : குடிசை. . குடிசை. .. குடிசைன்னு ஏன் நினைக்க வேண்டும்? அதையே...கோபுரம் என்று நினைத்தால்...

செல்வி : அதெப்படி...முடியும் . அத்தான் ..

பாலு : எளிமையிலே இருக்கின்ற இதயசுகம்...பணம், படாடோபம், பங்களா, பவிசு...இவைகளில் இல்லை.

செல்வி : அத்தான்...நீங்கள் பணத்தைப் பற்றித் தவறான எண்ணம் கொண்டிருக்கிறீர்கள்...

பாலு : செல்வி... தோட்டத்திலே... எத்தனை வகையான செடிகள்...எத்தனை அழகான வண்ண மலர்கள்...எத்தனைக் கவர்ச்சியான கொடிகள்...அவையெல்லாம்... ஒரு சின்னஞ்சிறு செடி துளசிக்கு ஈடாக முடியுமா...? துளசி பூவு பூக்குது... பூவிலே கூட கவர்ச்சி இல்லை. இலையிலும் அழகு இல்லை. ஆனால்...அது பரப்புகின்ற மணம்... அளிக்கின்ற சுகம்...எந்த செடிக்காவது உண்டா?

செல்வி : இல்லை அத்தான் !

பாலு : துளசியைப் போலத்தான் மனித வாழ்க்கை இருக்க வேண்டும்... ஆர்ப்பாட்டம் இல்லாமல் ஆடம்பரம் இல்லாமல்...எல்லா வகையிலும் சமுதாயத்திற்குப் பயனாக இருக்கனும்.

செல்வி : இல்லை... அத்தான்... குரோட்டன்ஸ் செடிகளும் அழகு செய்வதை மறந்து விட்டுப் பேசுறீங்க...

பாலு : செல்வி...அது...அழகு ஒண்ணுத்தான் கொடுக்கும். மணம் கொடுக்குமா...? மருந்து கொடுக்குமா...? போலிவாழ்க்கை ஒரு வேளை பணத்திற்குத் தேவைப் படலாம்...நமக்கு வேண்டாம்...

செல்வி : அத்தான்...உங்களை... என்ன சொல்லி...எப்படி புரிய வைப்பது...என்றே...தெரியவில்லை...

பாலு : நேரமாகுது...போய்...வர்றேன்...செல்வி...

செல்வி : உங்களுக்குப் பிடித்தமான....சுண்டைக்காய் வற்றல் வறுத்து வைச்சிருக்கிறேன்...பழைய சோறு... [டிபன் ஃபாக்ஸைக் கொடுக்கிறாள்]

பாலு : ஆஹா....எனக்கு....பஞ்சாமிர்தமாச்சே ... [டிபன் ஃபாக்ஸை எடுத்துக்கொண்டு...அவளை அணைத்து விட்டுச் செல்கிறான்]

[ திரை ]

**இடம் :**

பாலுவின் குடிசை

**நேரம் :**

பிற்பகல்

**உறுப்பினர்கள் :**

சேது, வேதா, செல்வி.

நிலைமை : [சேது, வேதா இருவரும் சேர்ந்து செல்வியைச் சாதுரியமாகப் பேசிக் கவர்ந்து, சென்னைக்கு அழைத்துச் செல்லுதல்]

**சேது :** என்னம்மா...என்ன முடிவு செய்திருக்கீங்க ?

**வேதா :** என்ன முடிவு... நல்ல முடிவாகத்தான் செய்திருப்பாங்க... தெய்வம் கூரையைப் பிளந்து கொட்டும் போது...வேண்டாம்னு சொல்வாங்களா...?

**செல்வி :** [கம்மிய குரலில்] ஆமாங்க...தெய்வம் கூரையைப் பிளந்து செல்வத்தைக் கொட்டினாலும் வேண்டாம் என்று...சொல்லிவிட்டார்...கணவர்.

**சேது :** விஷயத்தைச்...சொல்லிட்டீங்களா...?

**வேதா :** பணம் வேண்டா...பவிசு வேண்டா...பங்களா வேண்டா...இப்படி சொல்கிற மனிசன்...உலகத்திலே கிடையாது...புதுமையாயிருக்கே...!

**சேது :** இம்....சாமியாரா....கொட்டையைக் கட்டி.....ஓடு எடுத்துக்கிட்டுப் போகவேண்டிய...ஆளு... உங்களுக்கு வந்து...கணவர் ஆகியிருக்கிறார்... தலைவிதி.

செல்வி : அப்படியெல்லாம்...சொல்லாதிங்க... உழைத்துத் தான் உயர வேண்டும்... உழைத்துத்தான் உண்ண வேண்டும் என்ற இலட்சியம் கொண்டவர் அவர்.

வேதா : ஏம்மா...அதை யார் தப்புன்னு சொல்ரு...இப் போது...உங்களுக்கு...பங்களா...பவிசு...கார் டிரை வர்... வேணுங்களா... வேண்டாங்களா... சொல்லி விடுங்கோ...போய் விடுகிரும்.

செல்வி: எனக்கு வரவேண்டியதை நான் ஏன் வேண்டாம்னு சொல்றேன்...ஆனு ..என் கணவரை...எப்படி சரி செய்வேன்.

வேதா : இப்போது.....அப்படித்தான் சொல்வார்.....பணத் தையும்... பங்களாவையும்...அதன் சுகபோகத்தையும் பார்த்தா... சொல்லமாட்டார்... பணம் பாதாளம் வரைக்கும் பாயும்.

சேது : மொத்தம் பதினுன்கு உலகம் இருக்குன்னு சொல் ருங்க புராணத்திலே...அதல, விதல, சுதல, தராதல, மகாதல, ரசாதல, பாதாள...இந்த ஏழு கீழ் உலகத் தையும் கலக்கிவிட்டுப் பணம்...மேல் உலகத்துக்குப் போகுமம்மா... மேல் உலகமான பூ, புவ, சுவர், மஹர், ஜன, தபோ, சத்யஆகிய லோகத்தையும், இந்த ஏழையையும் ஒரு கை பார்த்து...இன்னும் ஏதாவது உலகமா இருந்தா......அந்த உலகத்தையும் பணம் கவர்ந்து விடுமம்மா...கவர்ந்துவிடும்.

செல்வி : என் தெய்வத்தை மாற்ற முடியலையே...

வேதா : என்னம்மா...உங்கள் தெய்வம்...கல்லா, இரும்பா, மரமா, கட்டையா ?

செல்வி : அப்படியிருந்தால்கூட ஒருவேளை மாற்றிவிடலாம் போலிருக்கு...

சேது : இந்தாம்மா...காலம் மாறுது...கோலம் மாறுது... கொள்கை மாறுது... மனிதனும் அப்படியே மாறி விடறவனம்மா...! காலம் யாரையும் சும்மா விடாது... நான்...சொல்றபடி...செய்தா...நல்லது... பேசாமல் எங்களோடு புறப்பட்டுவிடு...

செல்வி : என்ன...சொல்றீங்க...ஐயோ...என் தெய்வத்தை விட்டு...

வேதா : இந்தாம்மா...தெய்வம்...கடவுள்....பைத்தியக்காரி யாட்டே....பேசறீங்க.....பணத்திற்கு முன்னே.... தெய்வம்...கடவுள்...எல்லாம்...சரணாகதி... போகப் போகத்தான் தெரியும்...புறப்படம்மா...

செல்வி : ஐயோ...கணவனைவிடவா...காசு பெரிது... மனம் இடங் கொடுக்கவில்லையே...

வேதா : காசும்....பெரிசு....கணவனும் பெரிசுதானம்மா.... கொஞ்ச நாள் கழித்து... கணவனையே நீங்க...வந்து... கூட்டிக்கிட்டுப் போயிடலாம்...இம்...புறப்படம்மா... நேரம்...ஆகுது...

சேது : உங்களைப் பிரிக்க வேண்டும் என்பது எங்கள் கொள்கை இல்லையம்மா... கொஞ்ச நாளைக்குக் கண வனைவிட்டுப் பிரிந்து இருக்கிற மாதிரி நினைச்சுக்கிங்க.

செல்வி : என் மனம்...குழம்புதே...

வேதா : ஒன்னும் குழம்பாதேம்மா...போகப்போக சரியாகி விடும்.

**சேது :** இந்தாம்மா. ..உனக்குரிய செல்வம்....உன்னிடம்.... வந்து சேர்ந்ததும்......கணவனே......வந்து அழைச்சிக்கிட்டுப் போயிடலாம்...எல்லாம்...நான்....திட்டம் வெச்சிருக்கிறேன் . இம்...புறப்படம்மா....புறப்படு...

**வேதா :** இம்...புறப்படம்மா...புறப்படு... இப்போ...புறப்பட்டு வர்றலே....அப்புறம்....உங்களின் பங்களா.... கார்...பணம்...பவிசு ..பார்க்கவே முடியாது....இம்... புறப்படம்மா...

**செல்வி :** சரிங்க ..புறப்படறேன் . [உள்ளே செல்கிருள்]

**சேது :** புறப்படம்மா .. புறப்படு...

**வேதா :** என்னம்மா...உள்ளே...பண்ணறே...

**செல்வி:** [விம்மும் குரல் கேட்கிறது.]

**வேதா :** [உள்ளே போய்ப்பார்த்து விட்டு...வெளியே வந்து] கடிதம்... எழுதிக்கிட்டு இருக்குது... அப்பாவிப் பொண்ணு.

**செல்வி :** [ஒரு சிறு பையோடு வெளியே வருகிருள்]

**சேது :** இம்...ம்...புறப்படம்மா...யாரும்...இல்லே...யாரும் பார்க்கறதுக்குள்ளே...இங்கிருந்து கிளம்பிவிடனும்.

**வேதா :** யாரும்...இல்லே...புறப்படுங்க.

**செல்வி:** [சுற்றும்முற்றும் பார்த்துக்கொண்டே நடக்கிருள்]

**சேது :** நல்ல காலம்... பிறந்திடுச்சம்மா... நல்ல காலம் நோக்கிப் புறப்பட்டு விட்டே....

செல்வி : [நிற்கிறுள்... திரும்பிச் செல்கிறுள்] ஐயோ என் கணவரிடம்...ஒரு வார்த்தைக் கூட சொல்லாமல்...

சேது : ஐய...பெண் புத்தி...பின் புத்திங்கிறது சரியா... இருக்குதே...அப்புறம் வந்து சொல்லிக்கிலாம்...புறப் படம்மா...புறப்படு.

செல்வி : ஐயோ...மனம்...குழம்புதே...[கூட நடக்கிறுள்]

வேதா : குசேலர்...பரமாத்மாவை...தேடிப் போறதுபோல நீ போறப்போ... இப்படி... அழலாம்மா ? சீக்கிரம் வாம்மா...

சேது : ஆமாம்மா...உன் குடிசை...குபேரபுரியாக மாறப் போவுது.

செல்வி : அத்தான்...! உங்களைவிட்டுப் போயிட்டேன்னு தப்பா...நினைச்சுடாதீங்க...உங்கள் செல்வி...உங்களுக் காக ஏங்கிக்கொண்டே இருப்பாள்...

[ திரை ]

பிறவிகளிலேயே கேவலப்பிறவி மனிதப் பிறவியே! மனிதப் பிறவி அரியது எனில், உலகில் இவ்வளவு மதங்களும், மத வாதிகளும் தோன்றியிருக்க வேண்டியதில்லை. அவர்கள் மனிதர்களைத் திருத்த முயற்சித்திருக்கவும் தேவையில்லை.

— காவிரிநாடன்.

**இடம் :**

லிங்கம் எஸ்டேட்டிலுள்ள குடிசை

**நேரம் :**

அந்தி நேரம்

**உறுப்பினர்கள் :**

பாலு, லிங்கம்.

நிலைமை : [செல்வியைக் காணுமல் கதறும் பாலுவை, லிங்கம் ஆறுதல் கூறி அமைதிப்படுத்தல்]

பாலு : செல்வி...செல்வி...என்ன கொண்டு வந்திருக்கேன் பாரு...அடே...வெளியே வந்துதான் பாரே... செல்வி உனக்கு...கொம்புத் தேன் ! ரோஜாச் செடியில் கட்டி யிருந்த கொம்புத் தேன்... செல்வி... கல்யாணப் பெண் போல்....வெட்கம் வந்துட்டதா....வெளியே வாயேன்... (கொஞ்ச நேரம் கழித்து) இம்...சத்தத் தையே....காணேமே.... (உள்ளே போய் திரும்பி) எங்கே... போயிருக்கும்? எங்கே போனுள் செல்வி? செல்வி...! (வாய்விட்டுக் கத்துகிருன்) செல்வி... செல்வி ! [உள்ளே சென்றுகடிதத்தை எடுத்து வந்து படிக்கிருன்]

அத்தான்!

முதலில் என்னை மன்னித்துவிடுங்கள்... உங்களிடம் ஒரு வார்த்தை கூட சொல்லிக் கொள்ளாமல் புறப்பட்டுப் போகிறேன். எங்கே போகிறேன்... எதற்குப் போகிறேன்...! தயவு செய்து என்னைத் தேடாதீர்கள். நானே உங்களிடம் மீண்டும் வந்து உங்கள் பாதங்களில் விழுவேன். அத்தான்...

அன்பு மனைவி
செல்வி

லிங்கம் : என்ன பாலு...ஒரே சத்தமா... கத்திக்கிட்டு இருக்கே...செல்வி எங்கே போயிட்டாள் ?

பாலு : முதலாளி...முதலாளி...! [வாய்விட்டுக் கதறு கிறன்]

லிங்கம்: ஆத்திரப்படாதேப்பா... பொறு... என்ன எழுதி இருக்கிறது? அமைதியாயிருப்பா. [லிங்கம் கடிதத்தை வாங்கிப் படிக்கிறர்] Letter ஒன்றும் தெளிவாக இல்லேயே ! பாலு ! செல்வியிடம் ஏதாவது சண்டை போட்டாயா ?

பாலு : அவளிடம் நான் சண்டை போடவோ...என்னிடம் அவள் சண்டை போடவோ....ஒன்றுமே....இல்லே ! முதலாளி...ஒன்றுமே இல்லீங்களே... அவள் ஒரு மஞேரஞ்சிதம்... எப்படி எண்ணுகின்றேஞே...அப் படியே அவள்...நடந்து கொள்வாளே...

லிங்கம் : மஞேரஞ்சிதம் என்கிறய்......எப்படி எப்படி மஞேரஞ்சிதத்தை எண்ணி முகர்கின்றேமோ...அந்த மணம் வரும் மலராயிற்றே...மஞேரஞ்சிதம் ! அப்படி யென்ருல்......அவள்......உன்னே விட்டுப்......பிரியக் காரணம்...

பாலு : அவளுக்கும்...எனக்குமுள்ள ..ஒரு குறை...

லிங்கம் : ஒரே...குறை...

பாலு : ஒண்ணுமில்லீங்க.... அவள் சொல்வாள். ..பணம் ஒன்றிஞல்தான் வாழ்க்கை முன்னேறும் என்பாள்... நான் இல்லே என்பேன்... இந்தக் கருத்து வேறுபாடு தவிர...ஒன்றும் இல்லேயே...

லிங்கம் : I...understand....பாலு.... ஓர் இளம்பெண் பணம், காசு, நகை, நட்டு என்று விரும்புவதில் தப்பில்லையே... ஏழை ஏழையாகவே இருக்கவேண்டு மென்று நினைக்கமாட்டானப்பா......ஆனால்.....நீ...... எதிர்ப்பதமா...இருந்தால்...என்ன...செய்வாள் ?

பாலு : உண்மைதானுங்க...முதலாளி...அவளை என் இலட்சியக் கோட்டிற்குள் கொண்டு வரலாம்னு நினைச்சேன்... ஆனால்...அவள்...என் இதயக் கூட்டிலிருந்து பறந்திட்டா...பறந்திட்டா...

லிங்கம் : கவலைப்படாதே...பாலு... அவளை மீண்டும் அடைவாய்... அதுவரை பொறுத்திருப்பா...!

பாலு : முதலாளி... அவளுக்கு...ஆதரவு காட்ட யாரும் இல்லியே....அனாதைப் பெண்ணாச்சே.... சொந்தம் என்று சொல்லிச் செல்ல யாரும் இல்லியே... இந்தத் தோட்டத்திலே இருக்கிற செடிகளுக்கெல்லாம்..... ஒவ்வொரு ஆதரவு இருக்கிறது. ஆனால்...அவளுக்கு ஒரு ஆதரவும் இல்லையே...

லிங்கம் : பாலு.... அனாதை....ஆதரவு... இந்தப் பரந்த உலகத்தில்...அர்த்தமற்ற பேச்சப்பா... இந்தப் பரந்த உலகத்தில்...ஒவ்வொன்றுக்கும்...ஏதாவது ஆதரவு இருக்குமப்பா...

பாலு : செல்வி...! உன்னைப் புரிந்து கொள்ளாமல் வாழ்க்கையை நடத்திவிட்டேனே...செல்வி...

லிங்கம் : உலகத்தில் எதை வேண்டுமானாலும் புரிந்து கொள்ளலாம்...ஆனால் பெண்களைப் பற்றிப் புரிந்து

கொண்டவன்.....எவனும் இல்லையப்பா மிஸ்டர்! புரியாத புதிருக்குப் பெயர்தான் பெண்...பெண்... [போகிறார்]

பாலு : ஐயோ.....செல்வி....செல்வி..... ஏ.....சஞ்சலமே!... சபலமே! புதிரே!! புரியாத புதிரே!!! உனக்குப் பெயர்தான் பெண்ணா? உனக்குப் பெயர்தான் பெண்!

[ திரை ]

**இடம் :**

மோகன் பங்களா

**நேரம் :**

காலை 9 மணி

**உறுப்பினர்கள் :**

மோகன், செல்வி, சேது, வேதா, கிட்டு.

நிலைமை : [மோகன், செல்வியை மணக்கத் திட்டமிடல் - சேது அதை ஒருவாறு மாற்றல் - வேதா அஞ்சுதல்]

செல்வி: [ஓரத்தில் பயந்து நின்று கொண்டிருக்கிறாள்.]

மோகன் : சேது...உன்னை...எப்படிப் பாராட்டுவது என்றே தெரியவில்லை. துப்பறிவதில் உன்னைப் போல் ஒருவனும் இல்லை. You are wonderful man ! [செல்வியிடம் சென்று] ஆஹா !...உலகத்திலே எவள்...எவளையோ அழகி என்று சொல்கிறார்கள்.... ஆஹா.....என்ன..... அற்புதமான ரோஜா.. இதழ் !

சேது : ரோஜா இதழ் உதிர்ந்து வாடிப் போயிடுமே !

மோகன் : ஆஹா ! வட்டவடிவமான மதிமுகம் !

சேது : வட்ட வடிவான நிலா தேயுமே !

மோகன் : ஆஹா ! ஆப்பிள் பழக் கன்னங்கள் !

சேது : ஆப்பிள் பழம் நாளானால் கெட்டுப் போயிடுமே !

மோகன்: ஆஹா ! பால் போன்ற மேனி !

சேது : பால் புளிச்சுப் போயிடுமே !

மோகன் : ஆஹா ! பிடி இடை !

சேது : பிடியின்னா... பெண் யானை என்று பொருளாச்சே !

மோகன் : ஆஹா ! சேது...! இவளைக் கொண்டு வந்து ஒப்படைத்ததற்கு உனக்கு எது வேண்டுமானாலும் கொடுக்கலாம்.

சேது : அதெல்லாம்...வேண்டாம்...மோகன்.

மோகன் : ஓ...மிஸ்டர் சேது...! [ தோளில் கையைப் போட்டுக் கொண்டு தூரச் சென்று]

வேதா : [வருதல்]

மோகன் : விஷயங்களை இவளிடம் கூறிவிட்டாயா சேது ? எஸ்டேட் விவகாரம் பற்றி அவளுக்குக் கூறி விட்டாயா ?

வேதா : ஓ...அதையெல்லாம்...புட்டு...புட்டு வைச்சு சொல் லிட்டோம்.

சேது : ஆமா...மா ! உங்களைப் பற்றியும் உங்கள் அழகைப் பற்றியும்...சொன்னோம். உங்களுக்குக் கல்யாணம் செய்து வைக்க முடிவு செய்திருப்பதைப் பற்றியும் கூறினோம். வேதா ! அம்மாவை உள்ளே அழைச்சிக் கிட்டுப் போ ! திருஷ்டி பட்டுடும்...ம்.

வேதா : ஆமா...மா... வாங்கம்மா...உள்ளே போவோம்.

மோகன் : மிஸ்டர் சேது...அவளுக்கு இந்த எஸ்டேட் உயில் இந்தக் கதையெல்லாம் தெரிஞ்சா...உரிமை கொண்டாட ஆரம்பிச்சுடுவா...நாளைக்குக் கல்யாணமே செய்திக்க மாட்டேன்... உனக்கும் இந்தச் சொத்துக்கும் சம்பந்தம் இல்லை...என்று வழக்காட நாமே அவளுக்கு வழி சொல்லிக் கொடுத்தது போல் ஆகிவிடும்..... Be careful...

சேது : நோ...நோ...மிஸ்டர் மோகன்...நினைக்கிற அளவுக்கு நடக்காது...செல்விக்கும் மோகனுக்கும் ஜாம்...ஜாம் மென்று திருமணம் நடக்கத்தான் போறது...இந்த எஸ்டேட் உங்கள் கையில் சிக்கத்தான் போறது.

மோகன்: சேது...Marriageஐ எப்போ வெச்சிக்கலாம் ?

சேது : நாளைக்கே...வைத்து விடலாம்.

மோகன் : All right...நாளைக்கே...வைச்சுப்புடு.

சேது : ஓ...அதை...மறந்துட்டேனே...பெண்ணுக்கு நாக... தோஷம்...இருக்குதாம்... One year முடிந்த பிறகு தான் கல்யாணம் செய்ய வேண்டும்..... இப்படி சோசியர்...சொல்கிறார்.

மோகன் : What...நாகதோஷம் ? One year...சேது டைம் தள்ளிப் போகுதே...

சேது : சார்...! டைம் தள்ளிப் போனல் பரவாயில்லை, டைமிலே....நீங்க.... இந்த உலகத்தை விட்டே போயிட்டா ?

மோகன் : What are you talking ?

**சேது :** *சார்...நாகதோஷம் நீங்காமல் கல்யாணம் பண்ணி ஞல்...உயிருக்கே ஆபத்து.*

**மோகன் :** ஓ ..மை...God...உயிருக்கே ஆபத்து... All right, Postpone the date.

**சேது :** *நாளைத் தள்ளிப் போடுவதால்... காரியம் கெட்டு விடப் போறதில்லே.*

**மோகன் :** *சேது...! காய் கொம்பில் பழுக்கும் வரை காத் திருக்கக் கூடாது....பறித்துப் பழுக்க வைச்சா....அது நம்ம கைக்கே கிடைக்கும்.*

**சேது :** *காயைத் தான் பறித்தாச்சே... அதை இப்போ பழுக்கத்தானே வைக்கப் போறேம்.*

**வேதா :** *[காபியைக் கொண்டுவந்து வைக்கிருள்] எஜமான் சூடு ஆறு முன்னே காபியைக் குடியுங்க.*

**மோகன் :** *வேதா... சொன்ஞலும்... சொன்ஞள்... ஒரு வார்த்தை. சூடு ஆறுமுன்னே காபியைக் குடிக்கனும்.*

**சேது :** *காடு போவதற்குள்ளே........கல்யாணத்தைப் பண்ணனும்.*

**வேதா :** *ஐயோ...அப்படி இல்லீங்க....சூடு ஆறுமுன்னே காபியைக் குடிக்கனும். காடு போகுமுன்னே கடமையை முடிக்கனும்.*

**மோகன் :** *[பெல் அடித்தல்]*

**கிட்டு :** *[ஓடி வந்து] கார்...ரெடீங்க...*

**மோகன் :** [எழுந்து சென்றபடியே] சேது... செல்வியைச் சீக்கிரம்...என் பக்கம் திருப்பனும்... [என்றபடியே போகிறுன்]

**வேதா :** அங்கேண்டி மகளே... கஞ்சிக்கு அலேயிறே... இங்கே வந்து பழம் சாறைக் குடியின்னு சொல்லி... செல்வி அம்மாளே அழைக்சிக்கிட்டு வந்துட்டோம். புலிகிட்டே...இருந்து...எப்படி இந்தப் புள்ளிமானைத் தப்புவிக்கப் போறீங்களோ.

**சேது :** சத்தம் . போடாதே . வேதா... எல்லாம் நல்ல விதமா...நடக்கத் தான் போறது... நீயும் அதையும் பார்க்கத்தான் போறே.

**வேதா :** ஐயோ... மோகனைப் பார்த்தாலே பயமா இருக்கு. மஞ்சள் கயிறும் கழுத்துமா... இருக்கிற பெண்ணை... கல்யாணமே ஆகலேன்னு சொல்லிட்டீங்களே... செல்வி கழுத்திலே மறைஞ்சுக் கிட்டு இருக்கிற... தாலிக்கயிறு...தெரிஞ்சுட்டா...நம்ப உயிர்...என்ன... ஆகும்? முழுப் பூசணிக்காயைச் சேற்றிலே மறைக்க முயற்சிக்கிறீங்க...அப்பப்பா... நினைச்சாலே...பயமா இருக்கே.

**சேது :** வேதா... பயப்படாதே... பாம்பும் சாகக்கூடாது... குச்சியும் முறியக் கூடாது... அப்படித்தான்... நான் வேலே செஞ்சிக்கிட்டு இருக்கிறேன்... நீ...மட்டும்... தைரியமாய்... இருந்தால் போதும்.

**வேதா :** ஐயோ... அந்தம்மா...உள்ளே அழுதுக்கிட்டு இருக்காங்களே... என்னவாகப் போகுதோ...எது... வரப்போகுதோ...

**சேது :** கவலேப்படாதே... வெற்றி நமதே ..

[ திரை ]

படிக்கட்டுகள் மலை உச்சிவரை செல்வதைப்போல், விடுதலை பெற்ற நாட்டிற்கும் திட்டங்கள் படிப்படியாகவே செல்ல வேண்டும். அடியெடுத்து வைத்து நடக்கின்ற காரியங்களில் வெற்றி உறுதியாக உண்டு!

— காவிரிநாடன்.

**இடம் :**

மோகனின் பங்களா

**நேரம் :**

இரவு 8 மணி

**உறுப்பினர்கள் :**

சேது, வேதா.

நிலைமை : [சேதுவிடம் வேதா செல்வியின் கருவுற்ற நிலையைப் பற்றிக் கூறல்]

சேது : வேதா...வேதா !

வேதா : [வந்து கொண்டே] ஐயோ... போச்சு...போச்சு.

சேது : என்ன போச்சு ? ஏன் இப்படிக் கத்தறே ?

வேதா : ஐயோ... இங்கே வாங்களே...ன்.

சேது : [அருகில் போதல்]

வேதா : பெங்களூரிலிருந்து...செல்வியை இங்கே அழைச்சு வந்து எத்தனை மாசம்...ஆச்சு ?

சேது : பெங்களூரிலிருந்து... செல்வியை அழைச்சி வநது... அழைச்சு வந்து... ஒன்னு, இரண்டு, மூணு, நாலு... மாசம் ஆச்சு. எண்ணிப் பார்த்தால்... நாலு மாசம் முடியப் போகுது.

வேதா : 'ஐயோ !... நாலு மாசமா ? அந்த அம்மா வயிற்றி லும்... அஞ்சு மாசமோ... ஆறு மாசமோ... வளர்ந்துக் கிட்டு வருதே ! ஐயோ ! எப்படி ஆச்சோ ? எப்படி வளருதோ ?

சேது : என்ன ? அந்த அம்மாள் வயிற்றில் ஆறு மாசக் கருவா ? ஓ...மை...God... கல்யாணம் ஆகாதப் பொண்ணுன்னு மறைத்தேன். மறைக்க முடிஞ்சுது. தாலியைக் காட்டாமல் மறைக்கச் சொன்னேன். முடிந்தது. இதை எப்படி மறைக்கிறது ?

வேதா : நான் சொல்றதைக் கேளுங்கோ... பேசாமல் கோர்ட்டுக்குப் போயி... வைக்கிலே கிக்கிலே வெச்சு... கேஸ் போட்டுவிட்டுப் போங்க. நேரான பிளாட் பாரத்திலே போகும் போதே .. விபத்து நடக்குது. கோணலான ரோட்டிலே, குறுக்கேயே போனல்...

சேது : வேதா... உனக்கு விஷயம் புரியாமல் பேசறே. மோகனைச் சாதாரணமா நினைச்சுக் கேசு போடலாம் என்று நினைக்கிறே. கோர்ட்டையே விலைக்கு வாங்கி விடுவான்...ஜாக்கிரதை !

வேதா : இம்...முள் மேலே துணியைப் போட்டாச்சு...மெது வாத்தான்...எடுக்கணும்... ஐயோ ! புருஷனோடு... உடலும் உயிருமா வாழ்ந்துக்கிட்டு இருக்கிறவளைப் பிரிச்சுக் கொண்டாந்ததற்கு... என்ன தண்டனை... நமக்குக் கிடைக்குமோ ..கடவுளே.. கடவுளே !

சேது : ஏய் .. வேதா... நீ இப்படியெல்லாம் கோழைத் தனமா பேசினே...நான்... (பல்லைக் கடிக்கிறன்)

வேதா : உண்மையைச் சொன்னு...உடம்பு எரியுது ! நான் என்ன பண்ணட்டும் ?

பாலு : நான் சொல்றபடி...நட...வேதா... செல்வியை அழைத்துக் கொண்டு... உடனே விமலா நர்சிங் ஹோமிற்குப் போ... நான் பின்னுல் வர்றேன்.

வேதா : விமலா...நர்சிங்...ஹோமிற்கா...எதுக்குங்க ?

சேது : எதுக்கா ? குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டத்தைத் தீவிரமா அமுல்படுத்த... அசடு...! சீக்கிரம் சொன்னதைச் செய்.

வேதா : செய்யிறேன்... நீங்களும்...வாங்க.

[ திரை ]

தையற்காரரையும், சலவைத் தொழிலாளியையும் நம்பி குறிப்பிட்ட நேரத்தில் வெளியே கிளம்ப முடியாது!

அச்சகத்தாரையும், அரசியல் வாதியையும் நம்பி எந்நிகழ்ச்சியையும் குறிப்பிட்ட நேரத்தில் நடத்த முடியாது!

இவர்கள் காலங்கடந்தவர்களின் சவலைப் பிள்ளைகள்!

– காவிரிநாடன்.

**இடம் :**

விமலா நர்சிங் ஹோம்

**நேரம் :**

விடியற்காலை

**உறுப்பினர்கள் :**

செல்வி, சேது, வேதா, டாக்டர்.

நிலைமை : [செல்வியும், வேதாவும் உள்ளே இருத்தல் – டாக்டரும் சேதுவும் தனியே பேசுதல்]

டாக்டர் : மிஸ்டர் சேது ! அந்தப் பெண்ணுக்குக் கருச் சிதைவு செய்யவோ, ஆப்ரேசன் செய்யவோ முடியாது. அதற்குரிய Stage கடந்துவிட்டது... அப்படிச் செய் தால்...அந்தப் பெண்ணின் உயிருக்கே ஆபத்து வரலாம் . . !

சேது : டாக்டர் ! எப்படியாவது ....ஏதாவது செய்தாக வேண்டுமே ...பயங்கரமான....நிலைமையில் மாட்டிக் கொண்டிருக்கிறேன்...

டாக்டர் : மிஸ்டர் சேது...! அந்தப் பெண்ணிற்கு அழகான ஆண் குழந்தைப் பிறக்கப் போகிறது...

சேது : டாக்டர்...! மீண்டும்.....இதயத்திலே.....இடியைப் பாய்ச்சுகிறீர்களே...

டாக்டர் : சேது...! அந்தக் கருவை அப்படியே வளரவிடுவது தான்...நல்லது... மேலும் அந்தப் பெண்...மிகவும்... பலகீனமாக இருக்கிறாள்.

வேதா : [செல்வியை அழைத்துக் கொண்டு வெளியே வருதல்]

சேது : [எழுந்து கொண்டே] ஒன்றுமே......முடியாதா டாக்டர்...?

டாக்டர் : ஒன்றுமே...முடியாது! நத்திங் கேன் பி டன் அட் திஸ் ஸ்டேஜ்... Nothing can be done at this stage... [உள்ளே போகிறார்]

செல்வி : எதற்காக என்னை டாக்டரிடம் அழைத்துக் கொண்டு வந்தீங்க ?

சேது : ஒன்றுமில்லையம்மா...உடம்பைக் காட்டி பரிசோதிச் சுக்கிட்டுப் போகலாம்னு தான்.

செல்வி : எத்தனை நாட்களுக்குப் பொய்யான நாடகத்தை நடத்த முடியும்...? என்னை....என்....கணவரிடமே.... சேர்த்து விடுங்கள்...

சேது : காலம் கனியும் நாள்...வரவரைக்கும்...பொறுத்துக் கொள்ளம்மா...

வேதா : காலம் எப்போ கனியுமோ! காயாகவே இருக்குமோ.....ஆண்டவனுக்குக்குத் தான் வெளிச்சம்..... கூழுக்கு ஆசைப்பட்டு மீசையை எடுத்தாச்சு... கூழும்...போச்சு...

சேது : ஏய்...வேதா...! செல்வியைக் காரிலே அழைச்சுக் கிட்டு பங்களாவிற்குப் போ... நான் வர்றேன்...

வேதா : [செல்வியோடு போதல்]

சேது : [அவர்கள் போனதும்] நாமொன்று நினைக்க... சித்திரக்காரன் ஒன்னு நினைச்ச கதையாகப் போயிடு மோ... ஓ...மை...God... எதை......எதையோ...... மறைக்க முடிகிறது...? ஆனால்...உலகத்திலே... பொம்பளைங்க அதை மறைக்க முடியலையே. இம்... அதையும்...மறைத்து...மோகன்...கண்ணுக்குத் தெரி யாமல் செய்யவில்லையென்றால்......நான்......சேது.... அல்ல... [போகிறான்]

[ திரை ]

விதை நெல்லையே சாப்பிடும் விவசாயி! பயிரையே மேயும் வேலி! விக்கிரகங்களையே திருடும் அர்ச்சகர்! இவர்கள் பழம்பெரும் பூமியாம் பாரத பூமியில் தான் உலவுகிறார்கள்!

– காவிரிநாடன்.

**இடம் :**

மோகனின் பங்களா

**நேரம் :**

மாலை நேரம்

**உறுப்பினர்கள் :**

மோகன், சேது, ஜார்ஜ், பூபதி, கிட்டு.

நிலைமை : [ மோகன் தான் கண்ட கனவு பற்றி சேதுவிடம் கூறல் – வெளிநாட்டுச் சுற்றுப்பயணம் பற்றியும் நண்பர்களோடு உரை யாடுதல்]

மோகன் : [ புகைத்துக் கொண்டே ] சேது...! என்ன இனிமையான...மேனி...அவள் மேனி...! செல்வி... பக்கத்திலே...வந்தாள்... என் கைகளைப் போட்டேன்!

சேது : கைகளையா...போட்டீர்கள் ? [திடுக்கிட்டபடி]

மோகன் : நேற்று....அந்தப் பஞ்சணை மெத்தையில்.... ஆஹா...

சேது : [ திடுக்கிட்டபடி ] நேற்று அந்தப் பஞ்சணை மெத்தையில்...

மோகன் : அவள் தங்க மலர் மேனிதனில் தாவிவிட்டேன் என் கரத்தை..... துவண்டு விட்டாள்......துடியிடை யாள்...தும்பை மலர் வாடியது போல்... திறந்திட் டாள் ரோஜா இதழ்களை .... சுவைத்திட்டேன்....

சொட்டுச் சொட்டாய்! ..ஆஹா...அதை நினைக்க .. நினைக்க ..இன்பம்...இன்பம் !!

சேது : உண்மையாகத்தானு ..சார்...!...?

மோகன் : சேது...நான் ..எப்போதாவது பொய் பேசியது உண்டா ? இப்படியொரு Dream...

சேது : சார்...! வெளிநாட்டுச் சுற்றுப்பயணம் என்னுச்சு ?

மோகன் : பாஸ்போர்ட்டுக்கு அப்ளை பண்ணியிருக்கு...... [சாராயத்தைக் குடித்துக் கொண்டே]

சேது : பாஸ்போர்ட் இல்லாமலே ஒரு தேசத்துக்குப் போகலாமே...

மோகன் : What .? பாஸ்போர்ட் இல்லாமலே... வேற தேசம்... எந்தத் தேசம்...சேது ?

சேது : பாஸ்போர்ட் இல்லாமல் போகின்ற ஒரே தேசம் மரணம் என்னும் தேசந்தான்...

மோகன் : என்ன மிஸ்டர்...சேது...தத்துவம்...வெங்காயம்... ஜாலியா இருக்கணும்... அதைப் பார்...

ஜார்ஜ் } : [வருதல்] குட் மார்னிங் மோகன் !
பூபதி } குட் மார்னிங் மோகன் !

மோகன் : ஹலோ...குட் மார்னிங்.

ஜார்ஜ் : மிஸ்டர் மோகன்... Western countryயை ஒரு ரவுண்ட் அடிச்சிட்டுத் திரும்பலாம். பாஸ்போர்ட்ஸ் மூவருக்கும்...கிடைச்சிருச்சு.

பூபதி : பாஸ்போர்ட்டை எடுத்துக்காட்டு மிஸ்டர் ஜார்ஜ்.

ஜார்ஜ் : [எடுத்துக் காட்டிச் சிரித்தல்]

மோகன் : ஜார்ஜ்...! பணத்தைப் பற்றியும்...இப்போ... நமக்குக் கவலையில்லே...நம்மோ...எக்ஸ்போர்ட் பண்ணின... தவுசன்....ஸ்டேச்சூஸ்களுக்கு......ஏராளமான தொகை கிடைச்சிருக்கு

பூபதி : மிஸ்டர் மோகன்... இந்தியன் கோயிலில்லே இருக்கிற...விக்ரகங்களுக்கு....மேல் நாட்டுலே எவ்வளவு டிமாண்ட் !

சேது : ஏதேது..... இன்னும் .....கொஞ்ச நாளில்......தமிழ் நாட்டுக் கோயில்களில் விக்ரகங்களே இருக்காது போலிருக்கே !

பூபதி : மிஸ்டர்...This is very secret. Don't . talk....

சேது : ஓ . I...am...sorry... நீங்கள் மேற்கு நாடுகளையெல்லாம் சுற்றிப் பார்க்கப் போறீங்க.

மோகன் : சேது...! செல்வியைக் கூட கம்பெனிக்காக... அழைச்சிக்கொண்டு போக முடிவு செய்திருக்கிறேன். என்ன சொல்றே... அவள் அதையெல்லாம் பார்த்தா மனம் மாறி...என்னையே கல்யாணம் உடனே செய்துக்கிறேன்னு சம்மதிச்சிடுவா.

சேது : [ திடுக்கிட்டு ] செல்வியை அழைத்துக்கிட்டுப் போகிறீர்களா ? நோ...நோ... மிஸ்டர் மோகன்...! அதுக்கெல்லாம் செல்வி...மேட்சே...ஆகாது. மேலும் உங்களோடு அந்தப் பொண்ணு ஈடு கொடுக்க முடியாது. ஜாலியா...இருக்க முடியாது.

மோகன் : All right...Yes...Yes... அவள்.. ஒரு...கண்ட்ரி... ஜார்ஜ்...! பூபதி...! நம்ம பயண ஏற்பாடு உடனே நடக்கட்டும். Foreign Exchangeக்கானதை எல்லாம் உடனே...

ஜார்ஜ் : மிஸ்டர் மோகன்...எல்லாம் ஆட்டமேடிக்கா நடக்குது... நடந்துகொண்டிருக்கு.

பூபதி : நாம...ரெடி ஆக வேண்டியதுதான்... பயணம் ரொம்ப...Happyயாக இருக்கும் என்பதில் சந்தேகமே இல்லை.

சேது : Wish you success...

[ திரை ]

**இடம் :**

லிங்கம் எஸ்டேட்டிலுள்ள தோட்டம்

**நேரம் :**

மாலை நேரம்

**உறுப்பினர்கள் :**

பாலு, லிங்கம்.

நிலைமை: [பாலு சோகமே உருவாக
இருத்தல். எஸ்டேட் அதிபர்
எஸ், வி. லிங்கம் அவனுக்கு
ஆறுதல் கூறுதல்.]

பாலு : [சோகமாகத் தாடியுடனும் பரட்டைத் தலையுடனும் உட்கார்ந்திருத்தல்]

லிங்கம் : மிஸ்டர் பாலு .செல்வியை எண்ணி எண்ணி பாதி மனிதனாகி விட்டே. நானும் வாட்ச் பண்ணறேன்... செல்வீ உன்னைப் பிரிந்து சரியா...ஒரு வருடம். ஒரு வருஷத்தில்...உன் உருவமே மாறிவிட்டதே... பாலு! இப்படியே இருந்தால்...உன் நிலைமையே பரிதாபமாகப் போயிடும்.

பாலு : முதலாளி...! ஊமத்தன் பூ ..பெரிய பூவுதாங்கிறதாலே...யாரும் தலையிலே வைச்சுக்கிறது இல்லே... தாழம்பூவு... முள்ளுன்னு யாரும் தூக்கி எறியரதுமில்லே...' செல்வியை நான் தாழம்பூவுன்னு தான் நினைச்சேன்... அது...ஊமத்தன் பூவுதான்... அது மலர்ந்து...கூம்பி...கருக வேண்டியது தான். அதை

யாரும் வெச்சுக்கக் கூடாதுன்னு...கடவுள் எனக்கு... இப்போ சொல்கிறார் போல் உணர்றேன்.. முதலாளி, உணர்றேன்.

லிங்கம் : மிஸ்டர் ..பாலு... சில பெண்கள் ஊமத்தன் பூவு தான்...உண்மைதான்...அது மலர்ந்து பயன் படாமல் போக வேண்டியதுதான்...ஆனால் தாழம்பூப் போன்ற பெண்ணான செல்வியை அப்படி நினைக்காதே பாலு.

பாலு : முதலாளி... மலைமேல் கொண்டு போய் இறைவனை குடியமர்த்தியிருக்காங்க...மனிதர்கள்... ஆனா அவங்க தங்கள் மனசு மேலே...... குடியமர்த்தது இல்லே. ஆனால்...நான்...செல்விக்காக என் மனசையே பெரிய மலையாக்கி...அந்த மலையின் உச்சியிலே கோயில் கட்டி பூஜித்தேன்....முதலாளி... ஆனால்...நான் ...கோயில் கட்டி குடி வைக்கிற அளவுக்கு உயாந்தவளல்ல .. குப்பை மேட்டிலே...கிடக்கிற...உடைந்த கண்ணாடிச் சிதறலுன்னு...சொல்லிட்டுப் போய் விட்டாள்...

லிங்கம்: மிஸ்டர் பாலு...! பெண்ணைப் பற்றிச் சொன்னவர் கள் எல்லாம்... படுபாதாளம்...கடல் ஆழம்னு...என் னென்னமோ...சொல்லியிருக்கிறார்கள்....அதெல்லாம் உண்மைதான் என்று முடிவு செய்யத் தோன்றுது...

பாலு : பெண்... காணமுடியாத படுபாதாளமும் இல்லை. ஆழங் காணமுடியாத ஆழ்கடலுமில்லீங்க. அது... ஒரு வெட்டவெளி... அந்த வெட்டவெளியில் தெரியும் கானல் நீருங்க.

லிங்கம் : எப்படியாவது.....உன்னை.....மீண்டும்.....நல்ல நிலைக்கு உன் மனதை மாற்ற முயறசிக்கிறேன்...முடிய வில்லையே... What can I do?

பாலு : முதலாளி...! தயவு செய்து என்னை...வெளியே... போக...அனுமதிங்க... என் உள்ளம்...சுற்றிச் சுற்றி யாவது அமைதி அடையுமான்னு...பார்த்திடறேன்...

லிங்கம் : பாலு...இந்த நிலையிலா...உன்னை...நான் விடுவது... நோ...நோ...I can't...I can't... நானே செல்வியைத் தேடுவதற்கு வேண்டியதைச் செய்துக்கிட்டு இருக் கிறேன்.... தயவு செய்து.....எங்கேயாவது போய் விடாதே... Please don't leave from me...

பாலு : *[தேம்புகிறுன்]*

[ திரை ]

நீரில் தத்தளிப்பவன் எது கிடைத்தாலும் பிடித்துக் கொண்டு கரை சேர முயற்சிப்பான். சிந்தனையாளன் எப்பொருளிலும் அறிவைச் செலுத்தி புதிய கருத்தைக் காணத் துடிப்பான்.

— காவிரிநாடன்.

**இடம் :**

மோகன் பங்களா சமையலறை

**நேரம் :**

இரவு 9 மணி

**உறுப்பினர்கள் :**

வேதா, கிட்டு.

நிலைமை : [கிட்டு, வேதாவிடம் தன்னை மணம் செய்துகொள்ள வற்புறுத்தல் - வேதா மறுத்தல்]

கிட்டு : வேதா......என்......மாடப்புறுவே...! மாந்தோப்பு மயிலே...! என்ன சமையல்? என்ன கறி வகை?

வேதா : வாய்யா...கிட்டு!

கிட்டு : என்ன... தட்டு?

வேதா : தட்டு மேலே லட்டு.

கிட்டு : கொஞ்சம் பிட்டு...

வேதா : வாயிலே...ஆ...காட்டு... (கொட்டுகிறாள்)

கிட்டு : தூ...தூ...தூ... மிளகாய்ப் பொடியைக் கலந்தா... கொட்டறேன்னே... உன்னை என்ன செய்வேன்...... தெரியுமான்னே...

வேதா : என்னய்யா.....செய்வேன்னே...... போய்யா...... ஸ்பேனர்!

கிட்டு : ஏய்...உன்னை லவ் பண்றேன்னு தெரியுமா...ன்னே... உன்னைத்தான் கல்யாணம் பண்ணிக்கப்போறேன்னே.

வேதா : இந்தாய்யா...அதை மாத்திரம் மறந்திடு... கனவிலே கூட நடக்காதய்யா... நான் ..சேத்தய்யாவைத் தான்.....ஜாம்.....ஜாம்னு....கல்யாணம் பண்ணிக்கப் போறேன்... நீ அதைப் பார்த்து ஏங்கி ஏங்கிச் சாக வேண்டிய தான்...

கிட்டு : ஏய்...! இந்தக் கிட்டுவிடம் மட்டும் சபதம் போடாதே... நான்...நரி... நீதான் ஏங்கி ஏங்கிச் சாகருப்பலே...செய்திடுவேன் ..

வேதா : ஓய்...! நான்...பனங்காட்டு நரி ..அதெல்லாம்... சலசலப்புக்கு.....பயப்படாது இது ... போய்யா துடைப்பக்கட்டே...

கிட்டு : ஏய்...! நான்...மனசுலே ..வைராக்கியம் வைச்சா... வைச்சதுதான்...அப்புறம் மாத்திக்க மாட்டேன்னே...

வேதா : போய்யா.....கருஞ்சட்டி..... போயி.....யாராவது சேலை கட்டின...ஆம்பிளையைப் பாரு ...

கிட்டு : நாளைக்கு....மோக ..னய்யா வெளி நாட்டிலிருந்து திரும்பப் போறுங்க . அப்போ...

வேதா : அப்போ...என்னய்யா...அப்போ...

கிட்டு : அப்போ ..எல்லா விஷயத்தை டாண்...டாண் என்று அடிச்சு சொல்லப் போறேன்...... விமலா நர்சிங் ஹோமிலே...செல்வி அம்மாளுக்கு ஆண் குழந்தைப் பிறந்து வளருது... அந்தக் குழந்தை அடிக்கடி பங்களாவுக்கு வந்து போறது... சேதுவும் நீயும்

சேர்ந்து அதற்கு உடந்தையாக இருப்பது... மோகன் முதலாளியிடம் 'நாகதோஷம்' செல்விக்கு இருக்குதுன்னு சொல்லி ஏமாத்துனுது...

**வேதா :** ஐயோ. ..வேண்டாமய்யா....வேண்டாமய்யா...... நான் உன்னையே கல்யாணம் பண்ணிக்கிறேனய்யா... விமலா நர்சிங் ஹோமிலே...செல்வி அம்மாளுக்குக் குழந்தை பிறந்த விஷயம்...அக் குழந்தை வளர்க்கிற செய்தி ஒன்னும் சொல்லிப்புடாதய்யா...காரியமே... கெட்டுப் போயிடும்...

**கிட்டு :** இம்... இப்போ சம்மதிக்கிறே... அப்படீன்னு... நாளைக்கே......என்னை......வடபழனி ஆண்டவர் கோயில்லே .....கல்யாணம் பண்ணிக்கிறேன்னு சத்தியம் ..செய்யணும்...

**வேதா :** சரி...செய்யறேய்யா...

[ திரை ]

உலகத்தில் ஒரே ஒரு கூட்டு வியா
பாரந்தான் நீடித்து நடக்கக்
கூடியது. அது கணவன், மனைவி
சேர்ந்து நடத்தும் வாழ்க்கை
தான் !

— காவிரிநாடன்.

**இடம் :**

பங்களா

**நேரம் :**

இரவு நேரம்

**உறுப்பினர்கள் :**

செல்வி, சேது, வேதா.

நிலைமை : [செல்வி, பங்களாவை விட்டு வெளியேற எண்ணிக் கிளம்புதல் – சேதுவும், வேதாவும் செல்வியைப் போக வேண்டாமென்று தடுத்தல்]

செல்வி : [கையில் சிறு பையோடு கிளம்புதல்]

சேது : செல்வி! நில்...எங்கேயம்மா...புறப்பட்டுவிட்டாய்?

செல்வி : புறப்பட்டுப் போக வேண்டிய இடத்திற்குப் புறப் பட்டுவிட்டேன்...என்னைத் தடுக்காதீர்கள்... பணம்... பங்களா....பவிசு....காருன்னு....ஆசை காட்டி என் கணவரிடமிருந்து பிரித்தீர்கள்... கல்யாணம் ஆக வில்லை...என்று பொய்...சொல்லச் சொன்னீர்கள்... சொன்னேன்... தாலிக் கயிற்றை எடுக்கச் சொன்னீர் கள்.....எடுக்கவில்லை.....மறைத்துக் கொண்டேன்...... என் குழந்தையை அனாதையைப் போல் விட்டீர்கள்... அத்தனையும் பொறுத்துக் கொண்டேன். ஆனால்... ஐயோ...நேற்று விமலா நர்சிங் ஹோமிற்குப் போய்

என் அருமைச் செல்வனைப் பார்த்துவிட்டுத் திரும்பும் வழியில்...ஓர் உருவம்...வந்ததே...

குரல் ' : செல்வி...செல்வி...ஐயோ...செல்வி... நீ இங்கே தான்....இருக்கின்றாயா ? ஐயோ.. ..என் செல்வி..... காரிலே....போகிறாயா....நடை கெட்டவளே நில்.... நில்.. ஓடாதே. கொண்டவனைத்...துறந்து...கண்டவனோடு திரிபவளே....! நில்....உன்னிடம்....ஒரே ஒரு கேள்வியை மட்டும்...கேட்க விரும்புகிறேன்...பேயே... பிசாசே...நில்லடி...நில்...

செல்வி : இப்படிக் கத்திக் கொண்டே ஓடி வந்ததே.....ஓர் உருவம்...வளர்ந்த தாடியோடு...ஒட்டி உலர்ந்த கண்களோடு...பரட்டைத் தலையோடு . யார் தெரியுமா ? என் கணவர்...! ஐயோ...அவரைப் பார்க்கவிடாமல்... காரை வேகமாக ஓட்டி வந்து விட்டீர்களே... ஐயோ ! அவரது கால்களில் விழுந்து...மன்னிப்புப் பெற்று... அவர் கரத்தாலே மடிந்துவிடத் துடித்தேனே...... ஒன்றும் முடியாமல் செய்துவிட்டீர்களே...

சேது : செல்வி...! வெண்ணெய் திரண்டு வரப்போகிறது... அதற்குள் தாழியை உடைக்கப் பார்க்கிறாயே...... உன்னிடம் செய்து கொடுத்த சத்தியப்படி உன்னை உன் கணவனிடம்...சீக்கிரமே...சேர்ப்பேன்... அது என் . சத்திய வார்த்தை ..

செல்வி : சத்திய வார்த்தை இல்லை....வெறும் பொய்...! மீண்டும் என்னை மீளமுடியாத குழியில் தள்ளுவதற்குத்தா...னா ?

சேது : என் சத்தியத்தில் நம்பிக்கை இல்லையா ? உன் கணவரை எங்கு பத்திரமாக வைக்க வேண்டுமோ... அந்த இடத்தில்...

செல்வி : ஐயோ..... நான் பங்களாவிலே.....நாளுக்கொரு உடை...வேளைக்கொரு உணவு...இம்...ம்...காலையிலே நடந்ததே.....மறந்து.....காரிலே பறந்து.....ஐயோ..... அவரோ...பஞ்சையாய்...பராரியாய்...பாதையிலே... ஓடி வந்ததைப் பார்த்தும்...இன்னும் நான் உயிரோடு இருக்கிறேனே !...

சேது : செல்வி...! உன் கணவர்...கடந்த இரண்டு மாதங்களாக இந்தப் பங்களா தோட்டத்திலே...கார்டனராக...வேலை செஞ்சிக்கிட்டு இருக்கிறார்...

செல்வி : ஐயோ... என் பங்களாவிலே...அவர் தோட்டக் காரரா ?... ஐயோ...இதை...ஏன்...

சேது : சொல்லவில்லை என்று கேட்பாய்.. ? சொல்வதற்கு நேரத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன்... நேரம் வரவில்லை.... ஆனால்....சொல்ல வேண்டிய வலுக்கட்டாயம் இப்போது வந்து விட்டது...

செல்வி : ஐயோ.... அப்படியானால்.....என் கணவரின்..... கால்களில் விழுந்து...கழுவாய் தேடாமல்...இனி ஒரு நொடியும் இருக்க முடியாது...

வேதா : [வந்து கொண்டே] ...ஆக்கப் பொறுத்த சாமி... ஆறப் பொறுக்கக்கூடாதா ? அம்மா...எல்லாம் உங்க நன்மைக்குத்தான் நடந்துக்கிட்டு இருக்கு...இப்போ... அவசரப்பட்டால்...எல்லாம் போய்விடும்... உங்களின் சொத்து மட்டுமல்ல...உங்கள்...குழந்தை...கணவர்... உயிர்..எஸ்டேட்...எல்லாம்...போயிடும்...ஜாக்கிரதை!

செல்வி : ஐயோ.... ஏன்...என்னை...இப்படிக் கொல்கிறீர்கள்... ஐயோ...அம்மா...எனக்கு...சொத்து...சுகம்...

ஒண்ணுமே வேண்டாம்... என்...கடவுள்...கணவர்... இருந்தால் போதும்... ஐயோ...என்ன செய்வேன்... கடவுளே...எனக்கொரு புத்தியை இப்படியா கொடுக்கணும்... *[அழுது கொண்டே உட்கார்கிருள்]*

**சேது :** வேதா...! செல்வியைப் பார்த்துக்கொள்... நாளைக்கு...மோகன்...வருகிருன்...காரியம் கை கூடும் நேரத்தில்......பழம் நழுவிப் பாலில் விழும் நேரத்தில்...கொஞ்சம் ஏமாந்தாலும்...நாம் செல்விக்குக் கொடுத்த சத்தியத்தை நிறைவேற்ற முடியாது... வருகிறேன்...

[ திரை ]

**இடம் :**

மோகனின் பங்களா

**நேரம் :**

இரவு நேரம்

**உறுப்பினர்கள் :**

கிட்டு, சேது, மோகன்.

நிலைமை : [மோகன் வெளிநாட்டுப் பயணத்திலிருந்து திரும்புதல். கிட்டு, மோகனிடம் அவன் ஊரில் இல்லாதபோது நிகழ்ந்த சம்பவங்களையும் சேதுவின் சதித் திட்டங்களையும் தெரிவிக்கிறான். இந்தச் சூழ்நிலையில் சேது அங்கு வரவே, இருவருக்கும் சண்டை ஏற்பட்டு, மோகனால் சேது சுட்டுக் கொல்லப்படுகிறான்]

**கிட்டு:** *[தனிமையில்] வேதா ! என்னமோ...என்னைப் பற்றித் தவறா எடை போட்டிருக்கான்னே... இந்தக் கிட்டுப் பற்றிப் புரிஞ்சுக்கப் போற......என்னைக் கல்யாணம் பண்ணிக்கிறன்னு சத்தியம் செய்துட்டு...மாட்டேன்னு முடியுமான்னே... நீ யாரைக் கல்யாணம் பண்ணிடுவேன்னு...பார்த்திடறேன்னே...*

**சேது :** *[கிட்டுவைக் கடந்து போதல்]*

**கிட்டு :** *ஓஹோ ! சேதுவைக் கல்யாணம் பண்ணிக்கப் போறிய...அது நடக்காதுன்னே... சேது உயிரோடு இருந்தாத்தானே... அந்த ஆளையே முடிச்சுட்டா...*

மோகன்: [வந்துகொண்டே] டேய்...கிட்டு...நான்சென்ஸ்... இடியட்....என்னடா...செய்துகிட்டு இருக்கே...

கிட்டு: [நாற்காலியை சரியாக எடுத்துப்போட்டு] எசமான்... காரியம்....தலேக்கு மேலே.....போயிட்டது. ..நீங்க.... வெளிநாடு போனதும்....இங்கே [காதில்...மெல்லச் சொல்கிறுன்]

மோகன்: What...செல்விக்குக் கல்யாணம் ஆயிட்டுதா ?... நர்சிங் ஹோமிலே இருக்குதா ? ..அவள் புருஷன்... எனது தோட்டத்திலே...இருக்கிருனு... [ கிட்டுவின் காலரைப் பிடித்துத் தூக்கிப் போட்டு]

கிட்டு: எஜமான்...எஜமான்...எல்லாம் அந்த சேது செய்த வேலே...

சேது: [ வருதல் ]

மோகன்: ஆஹா..... சேதுவா......ஹ ..ஹ...ஹ ...சரியான சமயத்தில் வந்தாய்.... இது போன்ற chance.... யாருக்கும் கிடைக்காது..... [கிட்டுவைப் பார்த்து] கிட்டு....சன்னல்....வெண்டிலேட்டர்... கதவு எல்லா வற்றையும் இறுக்கிச் சாத்து...

சேது: என்ன. ..சார்....சன்னல்....வெண்டிலேட்டர்...கதவு எல்லாவற்றையும் மூடிவிட்டு......என்ன ரகசியம் சொல்லப் போகிறீர்கள் ?

கிட்டு: ['பட் பட்'டென்று எல்லாவற்றையும் சாத்துகிறுன்]

மோகன்: ஹ. ஹ....ஹா.... தீட்டிய மரத்திலே....பதம் பார்க்க முடியுமா...... [ரிவால்வரை எடுக்கிறுன்... நீட்டுகிறுன்]

**சேது :** மோகன்......நானும் தயாராகத்தான் வந்திருக்கேன்... *[ரிவால்வரை எடுத்துச் சுடுதல்]*

**மோகன் :** *[ சுடுதல் – இருவருக்கும் சண்டை மூளுதல். மோகன் சேதுவைச் சுட்டு வீழ்த்துகிறுன்].* கிட்டு... இவன்.....உடலை.....நாம்..... இதுவரைக்கும்......என்ன செய்தோமோ அதேபோல்.....எலட்ரிகல்.....சாம்பல் செய்து கரைத்துவிடு...ஹ...ஹா...

[ திரை ]

**இடம் :**

மோகனின் பங்களா

**நேரம் :**

இ ர வு   நே ர ம்

**உறுப்பினர்கள் :**

கிட்டு, சேது, மோகன்.

நிலைமை : [மோகன், கிட்டுவிடம் செல்வியைத் தீர்த்துக்கட்டுவது பற்றிப் பேசிக் கொண்டிருத்தல். இதை அறிந்த வேதா அவர்கள் இருவர் கண்களிலும் மிளகாய்த் தண்ணீரைத் தெளித்து அவர்களைச் செயல் இழக்கச் செய்து பின்னர் சுட்டுக் கொல்கிறாள்]

**மோகன் :** டேய்...கிட்டு...அவள் என்னடா செய்கிறாள் ?

**கிட்டு :** செல்வியைத்தானே சொல்றீங்கண்ணே...

**மோகன் :** இடியட்...அவளைத்தான்...அவளை அக்ரிமெண்டில் கையெழுத்து வாங்கிக்கிட்டு...முடிச்சு...விடவேண்டியதுதான்...

**கிட்டு :** ஆமாங்க....எசமான்....சேத்தய்யா...போன இடமே தெரியலே... சாம்பல்கூட கிடைக்காது...

வேதா : [கையில் தட்டோடு காபி கொண்டு வருபவள் போல் மிளகாயை அரைத்துக் கலக்கிக் கொண்டு வருகிறாள் ] ...எசமான்....காபியைக் குடிச்சுட்டுப் பேசுங்கோ... [மிளகாய்த் தண்ணீரை எடுத்து இருவர் கண்களிலும் இறைக்கிறாள்]

மோகன் : ஆ....இடியட்....நான்சென்ஸ். .. [கண்களை ஒரு கையால் அழுத்திக் கொண்டே ரிவால்வரைத் தேடு கிறான்]

கிட்டு : ஆ...எசமான்.. மிளகாய்த் தண்ணீரைக் கண்ணிலே ஊத்திட்டாளே......எரியுதே...... கண்களைத் திறக்க முடியலியேண்ணே...

வேதா : [ரிவால்வரை எடுத்துக்கொண்டு] ஐயோ பாவம்... எசமான்...நீங்க...கண்களைக் கசக்கிக்கிட்டு ரொம்ப கஷ்டப்படாதீங்க... ஐயோ பாவம்.....நீங்க கஷ்டப் படறதை நான் பார்த்துக்கிட்டு இருக்கிறதுங்களா... உங்க உப்பை தின்னதுக்கு இதுகூட செய்யாமல் வேறு என்ன செய்யறது .. [ரிவால்வரை அழுத்துகிறாள்... குண்டு மோகன் உடம்பில் பாய்கிறது]

மோகன் : ஐயோ...... [வீழ்கிறான்]

வேதா : கிட்டு! என் காதலரைச் சாம்பலாக்கிய உனக்கு... ஏதாவது நான் கைம்மாறு கருதாமல் உதவி செய்ய வேண்டும்...இதோ...பெற்றுக்கொள்... [சுடுகிறாள்]

கிட்டு : ஐயோ...வேதா.....என்னைச் சுட்டுடாதே..... உனக்காகத்தான் சேதுவை ஒழிச்சேன்...உன்னைக் கல்யாணம் பண்ணிக்கணும் என்ற ஆசையிலேதான்...... [வீழ்கிறான்]

**வேதா :** ஹ...ஹ...சிரிக்கிருள். [போனை எடுத்துப் பேசுகிருள்] ஹலோ...போலீஸ் ஸ்டேஷனு...நான்தான்... வேலைக்காரி பேசுகிறேன்......மோகன் எஸ்டேட்டுப் பங்களாவிலே.....இரண்டு கொலை நடந்திருக்குது..... வாங்கோ......வாங்கோ...... [போனை வைத்துவிட்டு இரத்தத்தைப் பார்த்துக் கொண்டே]

சேத்தய்யா...நம்மோ...செல்வி அம்மாளுக்குச் செய்த சத்தியப்படி......உங்களாலே முடியறதுக்குள்ளே...... இந்த வேதாவினுலே தான் முடியுமுன்னு கடவுள் மாத்திட்டான்...சேத்தய்யா! சேத்தய்யா... செல்வி அம்மாவை அவங்க புருசன் கிட்டே சேர்த்துட்டு வந்துடறேன்..... [போகிருள்]

[ திரை ]

காலம் கண் போன்றது
கடமை பொன் போன்றது
கடன் புண் போன்றது
கனவு பெண் போன்றது.

— காவிரிநாடன்.

**இடம் :**

செல்வி எஸ்டேட்டிலுள்ள தோட்டம்

**நேரம் :**

நடுப்பகல்

**உறுப்பினர்கள் :**

வேதா, செல்வி, பாலு, லிங்கம், குழந்தை.

[நிலைமை : பாலுவை செல்வி சந்தித்தல். ஆத்திரங் கொண்ட பாலு, செல்வியைக் கொல்ல முயற்சித்தல். அத்தருணம் வேதா வந்து தடுத்தல். நிகழ்ந்த செயல்களை யெல்லாம் எடுத்துரைத்தல். எஸ். வி. லிங்கம், செல்வியின் குழந்தையுடன் வருதல். மீண்டும் பாலுவும் செல்வியும் இணைதல்]

பாலு : [செடிகளைப் பெரிய கத்தரிக்கோலினுல் வெட்டிக் கொண்டிருத்தல் – செல்வி ஓடிவந்து அவன் காலில் விழுதல்]

செல்வி : அத்தான்.. ! அத்தான்... என்னை மன்னியுங்கள.

பாலு : ஆ....செல்வி.....நீயா ?.... கொடியவளே.....தளிர்க் கொழுந்துகளைக் கொஞ்சம் கொஞ்சமாகத் தின்னும் மொசுப் புழுவைவிட மோசமானவளே... என் இதயத்தை அணு அணுவாகக் கொன்றவளே......

உனக்கு...நான்...மன்னிப்பு...மன்னிப்பு . ஹ...இந்தக் கத்தரிக்கோல்... [கத்தரிக்கோலைக் கழுத்தருகில் கொண்டு போகிறான்]

செல்வி : என்னை எது வேண்டுமானாலும் சொல்லுங்கள் உங்கள் கரங்களாலேயே கொன்றுவிடுங்கள் !

பாலு : கொல்லத்தான்.....போகிறேன்......பணத்திற்காகப் பண்பை விட்டு ஓடிப் போனவளே !...... பங்களா வாழ்க்கைக்காக...கற்பை விற்றவளே ! உன்னை அணு அணுவாகச் சாகடிக்கப் போகிறேன்.

செல்வி : ஐயோ...என்னைச் சீக்கிரம் கொன்றுவிடுங்கள். தயவு செய்து கற்பை விற்றவள் என்று மட்டும் கூறாதீர்கள். .....அந்த வார்த்தை என் செவிகளில் புகுந்து வேதனையளிப்பதற்குள் என்னைக் கொன்று விடுங்கள்.

பாலு : உன்னைக் கொல்லத்தான் போகிறேன். உன்னைக் கொல்வதற்குமுன் நான் கேட்கும் கேள்விகளுக்குப் பதில் சொல்லடி. பசப்பே...... பயங்கரப் பிறவியே...!

செல்வி : அத்தான்...! தயவு செய்து உடனே என்னைக் கொன்றுவிடுங்கள்....ஒன்றும் கேட்காதீர்கள்...மலர் போன்ற...நான்...

பாலு : ஆ...மலர் போன்ற...நான் ?... கேடு கெட்டவளே ! மலரையும் உன்னையும் ஒப்பிட்டுப் பேசாதே ! வண்டுகளால் சூறையாடப்பட்ட மலர்...அதே

நாளில் செத்து மடிந்துவிடுகிறது. ஆனால் நீயோ... பங்களா, காரு, காசு, சொகுசு என்ற பெருவாழ் வல்லவா வாழ்ந்து கொண்டிருக்கிறாய்?...

[கத்தரிக்கோலைக் கழுத்திற்குக் கொண்டு போகிறான்]

வேதா : [ஓடி வருகிறாள்] ஐயோ...நிறுத்துங்களே...நிறுத் துங்களே...அந்த அம்மாவை ஒன்றும் செய்யாதீங்க... எல்லாத்துக்கும் காரணம் நாங்கள்தான்!

பாலு: யார்...நீ...?...இதில்......குறுக்கிடாதே!

வேதா : ஐயோ...! ஆத்திரத்தால் நிதானமிழந்து பேசா தீங்க... இந்த லெட்டரைப் படியுங்களேன்...

பாலு : யாரும்....தடுக்காதீர்கள். இவளைக் கொன்று விடு கிறேன்...கொன்று விடுகிறேன்.

வேதா : என்னைக் கொன்றுவிட்டு......அவங்களைக் கொல் லுங்க...... [பாலு முன் குறுக்கே நிற்கிறாள்]

பாலு : [சற்று நிதானம் கொள்ளல் – கடிதத்தை வாங்கிப் படிக்கிறான்]

[கடிதத்தைப் படித்து முடிக்கிறான்]

பாலு : இந்த எஸ்டேட்டுக்குச் சொந்தக்காரி செல்வி...!

வேதா : ஆமாங்க...இவங்க அம்மா பெயர்தான் மங்களாம் பிகை...அவங்கதான்...உயிலை இந்த அம்மா பெயரிலே

எழுதி வைச்சிட்டுச் செத்திட்டாங்க. அந்த அம்மா சாகும் போது செல்வியம்மா சிறு குழந்தை. அவங்க வீட்டிலிருந்த ஞானம் என்ற உறவுக்கார அம்மா இந்த அம்மாவை மோகன் கிட்டே தெரியாமல் வளர்த்துப் படிக்க வைச்சாங்க. மோகன் செல்வி யுடைய மாமன்தான்.

**பாலு :** செல்வி..... இதெல்லாம்......உண்மையா...?

**செல்வி :** [தலை கவிழ்ந்தபடி...தலையை ஆட்டுகிருள்]

**வேதா :** அந்தச் சொத்துக்குரிய வாரிசான செல்வியைக் கண்டுபிடித்துச் சேர்க்கணும்னு நானும் என் காதலர் சேதுவும் நினைச்சோம்....அதையும் நடத்திஞேம்.... ஆஞல்...உங்கள் மனைவி...ஒரு பாவமும் அறியாத துங்க... என் காதலரை......அந்தப் பாவிக் கொன் னுட்டானுங்க. [அழுகிருள்]

**லிங்கம் :** [பையஞேடு வருகிருர்] மிஸ்டர் பாலு...!

**செல்வி :** ஐயோ...என் கண்ணு...ராஜா...! [ஓடி வாங்கிக் கொள்ளுதல்]

**பாலு :** யாருடைய குழந்தை...? யாருடைய குழந்தை...? முதலாளி...! எங்கே இருந்து கொண்டு வந்தீங்க?

**செல்வி :** ஐயோ...நீங்களே....குழந்தைக்குரிய தகப்பனே... யாருடைய குழந்தையின்னு கேட்கிறீங்களே...... ஐயோ......கடவுளே......இப்படியெல்லாம் எனக்குத் தண்டனை கொடுக்கணுமா?

வேதா : உங்களுடைய குழந்தைதான்......உங்கள் மகன் தான்.

பாலு: என்னுடைய குழந்தை! பாலுவினுடைய குழந்தை? இப்படிச் சொல்வதற்கு என்ன தைர்யம்...... சோரம் போய்ப் பெற்றதற்கு......நான் தந்தையா?...... கொடுமை! கொடுமை!! என் எதிரில் நிற்காதீர்கள்... சொல்...சொல்...செல்வி...... என்னை விட்டு ஓடிப் போனாய்...மறந்தாய்.. வாழ்ந்தாய்...அதையெல்லாம் கூட சகித்துக் கொண்டேன். ஆனால்...எவனிடமோ பணத்திற்கோ, பகட்டான வாழ்விற்கோ, பங்களா வாசத்திற்காகவோ கற்பை விற்றுப் பெற்ற குழந்தைக்கு என்னைத் தகப்பனாக்குகிறாயே...என்னைத் தகப்பனாக்குகிறாயே......

செல்வி : ஐயோ......அகிலாண்டேஸ்வரி......எனக்கொரு இப்படியொரு சோதனையா ...? ஐயோ...என்னைக் கொன்று விடுங்களேன்...... ஏன் என்னை இப்படி வதைக்க வேண்டும்?

லிங்கம் : மிஸ்டர் பாலு ..! ஆத்திரத்தாலும் அடங்காதத் துடிப்பாலும்....சிந்திக்காமல்....பேசறே.... Please... கொஞ்சம் அமைதியாய் இருப்பா... நான் சொல்றேன்... அவன்...உன் பையன் தானப்பா...

பாலு : முதலாளி...! ஐயோ......நீங்களுமா...?... இவள் யாரிடமோ போய்ப் பெற்ற குழந்தைக்கு என்னைத் தந்தையாக்குகிறீர்களே......

வேதா : ஐயோ...! எப்படி உங்களுக்குப் புரிய வைக்கிறதென்று தெரியில்லையே. ஐயோ...! செல்வி அம்மா?

உங்களுக்குக் கடைசியிலே இப்படியொரு நிலைமை வருமுன்னு...நினைக்கிலியே...

செல்வி : ஐயோ...! வேதா... ஏம்மா இப்படியெல்லாம் கொண்டு வந்திட்டீங்க...ஐயோ...கண்ணகித் தாயே ! உலகமாதா !! எனக்கு இப்படியொரு அவல நிலையா ? ஐயோ...பத்தினித் தெய்வங்களே ! நீங்கள் சொல் லுங்கள். நான்...தவறி...விழுந்தவளா...?

லிங்கம் : செல்வி...! கொஞ்சம்...அமைதியாயிரு ! உனக்கு மட்டும் இந்தச் சோதனை வரவில்லையம்மா...உலகமாதா சீதா பிராட்டிக்கு......இப்படியொரு நிலைமை வந்தது...

பாலு : முதலாளி! நீங்கள் இந்த விஷயத்தில் குறுக்கிடாதீங்க... இவளை ஒரே வெட்டில்...

லிங்கம் : பாலு...! அமைதிகொள்... லக்ஷ்மணன் சீதையைக் கொண்டு காட்டிலே விட்டுவிட்டு வருகிறப்போ உலகமாதா...சீதாபிராட்டி கூறினாள் : "லட்சுமணா, என் வயிற்றைப் பாரப்பா... ..வயிற்றில் குழந்தை வளருது .. நீதான்...சாட்சி .. சீதையைக் காட்டிலே விடும்போது ஒன்றுமில்லையே. அதற்குப் பிறகு அவளுக்கு எப்படிக் கர்ப்பம் ஏற்பட்டது ? எப்படிக் குழந்தை பிறந்தது என்று உன் தமையன் கேட்பார் அச் சந்தேகத்திற்கு நீதானப்பா சாட்சி"

வேதா : அப்படி சாட்சியாவது...சீதா பிராட்டிக்கு இருந் தது... ஐயோ...இந்த அம்மாவிற்கு...

லிங்கம் : நானே....இருக்கிறேனம்மா.... மிஸ்டர் பாலு...! உன் மனைவி......குளிக்காமல் இருக்கான்னு......என் 'குக்கு' செல்லம்மாள் சொன்னாள்.

பாலு : முதலாளி...!

லிங்கம் : மேலும்.....கேளு.....நான்.....அந்த மகிழ்ச்சியான செய்தியோடு செல்வியைப் பார்க்கப் போனபோது... மயங்கிக் கிடந்தாள்.... அப்போது.....இதோ....நிற்கிறார்.....டாக்டர்.. ...பாபு......விமலா....நர்சிங் ஹோம் டாக்டர் பெங்களூருக்கு வந்திருந்தார். அவரை அழைத்து வந்து காட்டினேன்.

டாக்டர் : ஆமாம் மிஸ்டர்... அப்போது அவள் கருவுற்று இருக்கிறாள் என்று சொன்னேன்... காலவசத்தால்... இதே பெண்...என்னுடைய நர்சிங் ஹோமிற்கு வர வேண்டியதாகிவிட்டது...

பாலு : முதலாளி! எல்லாம் ..கனவு போல் ..இருக்குதே... வாழ்க்கையைப் புரிந்து கொள்ளவே முடியலையே... செல்வி. ....உன்னைப் புரிந்து கொள்ளாமல் பேசிட்டேன்.

லிங்கம் : மிஸ்டர் பாலு...! ஒருவரையொருவர் புரிந்து கொண்டாலே வாழ்க்கைக்கு முதல் வெற்றி. அந்த வெற்றியே எல்லா வெற்றிக்கும் முதல் வெற்றி!

வேதா : ஆமாம் எஜமான்? புதிரும், புரியாமலும் பூட்டிக் கிடக்கிற வீடு மாதிரி பொம்பளைங்க மனசுங்க..... அதைத் திறக்குறதுதான் முதல் வெற்றிங்க...

செல்வி : அத்தான்...! உங்களைப் புரிந்திருந்தும் நான்தான் வேறு பாதையிலே போயிட்டேன்...... என்னை மன்னிச்சிடுங்க...மன்னிச்சிடுங்க... நீங்கள்தான் என் கண்கண்ட கடவுள் !

[காலில் விழுகிருள்]

பாலு : செல்வி...! எழுந்திரு....நான்தான்...உன் உள்ளத்தைப் புரிந்து கொள்ளவில்லை......அக்கினி சாட்சியாக உன்னைக் கரம் பிடித்தது வீண் போகவில்லை. அக்கினி உன் கற்பைக் காப்பாற்றிவிட்டது.

வேதா: கல்யாணம் செய்யறப்போ எத்தனையோ சாட்சிகள் பக்கத்திலே இருந்தாலும், அக்கினி சாட்சி ஒன்றுதான் சாட்சியாகக் கடைசிவரை நிக்குங்க... ஆமாங்க...நான் சொல்றேங்க...அக்கினி சாட்சியா... இவங்கமேல் எந்தக் குற்றமும் இல்லீங்க...

செல்வி : வேதா...! என் வாழ்க்கையைக் காப்பாற்றிய அக்கினி சாட்சி நீதானம்மா... [வேதாவைக் கட்டித் தழுவிக் கொள்கிருள்]

லிங்கம் : அக்கினியிலே புடம் போட்டு எடுக்கும் போது தான் தங்கத்தின் மதிப்பு உயருகிறது. வாழ்க்கையிலே பெண்கள் கற்பு என்ற அக்கினியிலே இருந்து மூழ்கி எழும்போது தான் அவர்கள் பிரகாசிக்கிருர்கள்...

செல்வி : முதலாளி...!

**லிங்கம் :** What முதலாளி...நீங்கள்தான் பெரிய எஸ்டேட் முதலாளியம்மா... Don't call me as முதலாளி... இந்த உலகத்திலே முதலாளி – தொழிலாளி என்ற பேதங்களுக்கே இனி இடமில்லே. எல்லோரும் ஓரினம் ! எல்லோரும் ஓர் நிறை !!

[ திரை ]



## காட்சி அமைப்புகள்

1. ‘எஸ். வி. லிங்கம் எஸ்டேட்’ என்ற ஆங்கில எழுத்து பெயர் தாங்கிய முன் வாயிலோடு பூத்துக் குலுங்கு கின்ற செடி, கொடிகள் அடர்ந்த தோட்டத்தின் மத்தியில் தோற்றமளிக்கின்ற நவீன மாளிகை.

2. எல்லா வித ஆடம்பரப் பொருள்களும் நிரம்பி வழியும், நவ நாகரிக வசதி படைத்த மோகன் பங்களா.

3. தோட்டத்துக்குள்ளே அமைந்த சின்னஞ் சிறிய குடிசை யும் அதை ஒட்டிய சிறு குளமும்.

4. உயர்ந்த மரங்களும், நெருக்கமான பூஞ் செடிகளும் சூழ்ந்த சோலை.

5. ‘விமலா நர்சிங் ஹோம்’ என்ற தமிழ்ப் பெயர் பலகை தொங்கும் டாக்டரின் மருந்தகம்.

6. பணக்கார வீட்டுச் சமயலறை.

7. சென்னையிலுள்ள அண்ணா சாலையைப் போன்ற பாதை.

வெண் திரை.

9. அவ்வப்போது பயன்படுத்திக் கொள்ளத்தக்க பூஞ் செடிகள் கொண்ட தொட்டிகள் பல.

# பாத்திரங்கள் பங்கேற்கும் காட்சிகள்

1. பாலு : 1, 4, 7, 12, 13, 14, 15, 20, 22, 27, 32. *[11 காட்சிகள்.]*
2. செல்வி : 1, 4, 7, 12, 14, 15, 19, 20, 21, 23, 25, 29, 32 *[13 காட்சிகள்.]*
3. மோகன் : 3, 6, 9, 11, 23, 26, 30, 31. *[8 காட்சிகள்.]*
4. சேது : 3, 5, 6, 8, 10, 11, 16, 17, 18, 19, 21, 23, 24, 25, 26, 29, 30, 31. *[18 காட்சிகள்.]*
5. வேதா : 3, 8, 10, 11, 16, 18, 19, 21, 23, 24, 25, 28, 29, 32. *[14 காட்சிகள்.]*
6. ஏகாம்பரம் : 1, 4, 7, 13, 14. *[5 காட்சிகள்.]*
7. எஸ். வி. லிங்கம் : 1, 4, 7, 12, 13, 19, 22, 27, 32. *[9 காட்சிகள்.]*
8. ஜான் : 3, 5, 8, 9, 10. *[5 காட்சிகள்.]*
9. கிட்டு : 3, 5, 6, 11, 16, 18, 23, 26, 28, 30. 31. *[11 காட்சிகள்.]*
10. ஜார்ஜ் : 6, 9, 11, 26. *[4 காட்சிகள்.]*
11. பூபதி : 6, 9, 11, 26, *[4 காட்சிகள்.]*
12. டாக்டர் : 25, 32. *[2 காட்சிகள்.]*
13. கல்லூரி மாணவர் 1 : 2, 17.
14. கல்லூரி மாணவர் 2 : 2, 17.
15. அலி : 2.
16. கிளி சோசியன் : 17.
17. ஒரு வயது ஆண் குழந்தை : 32.

# ஒன்று கேட்பீர்

இந் நாடகத்தை மேடை ஏற்றிக் கொள்ளுங்கள்! ஏற்றும்போது முடியுமானல் ஆக்கியோனுக்கு ஒரு வரி எழுதுங்கள்!

எழுத்துலக பூர்சுவாக்களும் வழக்கம்போல் என் எழுத்துக்களைச் சுரண்டிக் கொள்ளலாம்!!

சுரண்டல் ஏகாதிபத்திய எழுத்தாளர்களே! நீங்கள் எத்தனை நாளைக்கு இந்தப் பணியைத் தொடர்ந்து செய்துகொண்டிருக்கப் போகிறீர்கள்?

— காவிரிநாடன்.

# அக்கினி சாட்சியாக...!

*அக்கினி சாட்சியாக இந்நாடகத்தில் வரும் பெயர்கள், சம்பவங்கள் அனைத்தும் கற்பனை இல்லை. உண்மை! அனைத்தும் உண்மையே!!*

— காவிரிநாடன்.

# ஏன் இந்த விலை?

எல்லாப் பொருள்களின் விலைகளும் எவரெஸ்டை எட்டிப் பிடிக்கின்றன !

அச்சகத்தானும், பதிப்பாளனும், அதன் விற்பனையாளனும் மட்டும் குண்டுமணி நிகர் குன்றின் மீது குந்தியிருக்க முடியுமா ?

அறிவுள்ளவர்கள் சிந்திப்பார்களாக !

நூலைத் தயக்கமின்றி வாங்குவார்களாக !!

— காவிரிநாடன்.

